போன் நெ 15. விலை 2 அணா REGD. NO. 4843

# திராவிடநாடு

மலர் 12 | 18—4—54 | இதழ் 42

# சர்க்காரின் ஜாதி ஒழிப்புப் பிரசாரம்!

## ஏமாற்றத்துக்கு ஏணிப்படியாகும்!

### ஜனநாயகத்தில் சர்க்கார்!

### சர்க்காரில் ஜனநாயகம்!

[அடிகள்]



சந்தர்ப்பங்கள் நேரும்போதெல்லாம் தங்களை முற்போக்கு வாதிகள் என்று காட்டிக் கொள்வதில் இப்போது சிலருக்கு அலாதியான ஒரு ஆசை உண்டாகியிருக்கிறது. எங்கு பார்த்தாலும் முற்போக்குக் கருத்துக்களே பேசப்படும் இக்காலத்தில் இவர்களால் காதைப் பொத்திக் கொண்டிருக்கமுடியவில்லைபோலும்! முற்போக்குக் கருத்துக்கள் பேசப் படுவதைக் கேட்கும்போது "சகிக்க முடியவில்லையே" என்று சலித்துக் கொள்பவர்கள்கூடச் சந்தர்ப்பம் நேரும்போது தங்களை அறியாமலேயே சில நல்ல கருத்துக்களை நாவால் உச்சரித்துவிடுகின்றனர். அந்தச் சமயங்களில் "பார்த்தீர்களா, இவர்கூடச் சீர்திருத்தம் பேசுகிறார். நாடு எந்த அளவுக்கு முன்னேறிக்கொண்டு வருகிறதென்பதற்கு இவருடைய சீர்திருத்தப் பேச்சு ஒரு எடுத்துக்காட்டு" என்று பலரும் பேச ஆரம்பித்து விடுகிறார்கள்.

நாடு சீர்படவேண்டும்—நாட்டிலுள்ள கூடாத பழக்க வழக்கங்கள் சீர்திருத்தப்படவேண்டும்—தேவையற்ற—பயனற்ற கோட்பாடுகள் ஒழிக்கப்படவேண்டும் என்ற முற்போக்குத் துறையில் இறங்கி, அதற்காகவே தங்கள் வாழ்நாள்முழுவதையும் அர்ப்பணித்து அரும்பணியாற்றி வருபவர்கள் மத்தியில், அந்தத் துறைப் பக்கம் கூடத் தங்கள் பார்வையைத் திருப்ப விருப்பம் கொள்ளாத "விவேகிகள்" சிலர் திடீரென்று குதித்து, "இதோ நாங்களும் உங்களைப் போன்ற சீர்திருத்தவாதிகள் தான்" என்று கூறிவிட்டு மறைந்து விடுகின்றனர்.

உண்மையானசீர்திருத்தவாதிக்கு, இது, அவனுடைய வாழ்க்கையோடு சம்பந்தப்படுத்தப்பட்ட ஒருபெரும் பொறுப்பு மற்றவர்களுக்கு, இது, அவர்களுடைய வாழ்க்கைக்குச் சம்பந்தமில்லாத ஒரு பொழுது போக்கு.

இப்படிப்பட்ட வீண் பொழுது போக்கிகளைக் காணும்போது, உண்மையான சீர்திருத்தவாதியின் உளம் குமுறத்தான் செய்கிறது. ஜாதியின் பாதுகாவலனாக இருக்கும் ஒருவன் திடீரென்று ஜாதி ஒழிய வேண்டுமென்று கூறினால், ஜாதி ஒழிப்புப் பணியில் சதா சர்வ காலமும் ஈடுபட்டிருப்பவன் "அந்த ஆளை"ப்பற்றி, என்ன எண்ணுவான்? உண்மையான சீர்திருத்த வாதிகளைப் பரிகாசம் பண்ணுகிறான் என்றுதானே எண்ணுவான். ஜாதி சாயாமல் இருந்தால்தான் தங்கள் வாழ்வு சரியாமல் இருக்கும் என்ற எண்ணத்தில் ஊறிக்கிடப்பவர்கள், ஜாதி ஒழியவேண்டுமென்று சந்தர்ப்பம் நேரும்போதுமட்டும் பேசிவிட்டால் ஜாதி ஒழிந்துவிடுமா—ஒழித்துவிட முடியுமா என்று, அல்லும் பகலும் அதற்காகப் பாடுபடுபவன் எண்ணாமல் இருக்க முடியுமா?

இந்த எண்ணத்தைமெய்ப்பிக்கும் வகையில்தான் இந்திய யூனியன் உள்நாட்டமைச்சர் டாக்டர் கட்ஜு அவர்களின் பேச்சும் அமைந்திருக்கிறது. 11-4-54-ல் அகில இந்திய பிற்பட்ட வகுப்பு நிறுவனத்தின் மாநாட்டைத் துவக்கிவைத்த டாக்டர் கட்ஜு அவர்கள்,

> எந்த இந்தியனும் தன் பெயருக்கு முன்னும் சரி, பின்னும் சரி ஜாதியைக் குறிப்பிடும் சொல்லை உபயோகிக்கக்கூடாது,

என்று காரசாரமாகவே பேசியுள்ளார். இவருடைய பேச்சின் வேகத்தைக் காணும் போது, "ஆகா! இவரன்றோ உண்மையான சீர்திருத்தவாதி! சீர்திருத்தத் துறையை அடையவேண்டிய படிக்கட்டுகளையெல்லாம் தாண்டிச் சென்ற அறிவுச் செம்மலன்றோ இவர்!" என்று தான் இவரை அறியாதார் எவரும் அவசரப்பட்டு முடிவு கட்டிவிடுவர். ஆனால், டாக்டர் கட்ஜு அவர்களைப்பற்றி அறிந்தவர்களுக்கெல்லாம் அவருடைய அந்தப் பேச்சு, சந்தர்ப்பம் கிடைத்த நேரத்தில் சமயோசிதமாகப் பேசிய ஒரு பொழுது போக்குப் பேச்சென்பது நன்கு தெரியும்.

டாக்டர் கட்ஜு அவர்கள் இந்திய யூனியன் என்று அழைக்கப்படும் இந்த உபகண்டத்தின் உள்நாட்டு அமைச்சர். நாட்டுக்கு நல்லதைச் செய்யும் அதிகாரத்தை மக்கள் அவருக்கு அளித்துள்ளனர்.

ஜாதி ஒழியவேண்டுமென்ற ஆசை அல்லது நோக்கம் உண்மையாகவே டாக்டர் கட்ஜுவுக்கு இருந்தால் அதை, அவர் சிரமமில்லாமலும் சீக்கிரத்திலும் செய்து விடலாம். ஜாதி ஒழிப்புத் தீர்மானம் ஒன்றை தயார் செய்து சட்டமாக்குவதற்கு வேண்டிய சகல வசதிகளும் அவருக்குக் கிடைத்திருக்கிறது. இந்தப் பொன்னான சந்தர்ப்பத்தை (மந்திரி பதவி காலத்தை) நழுவவிடாமல், இந்த நல்ல காரியத்துக்காக அவர் பயன்படுத்துவாரானால், உண்மையாகவே வெற்றி கிடைக்குமென்று உறுதியாகக் கூறுகிறோம்.

ஆனால், அவருடைய இந்தப் பேச்சு, வெறும் பொழுதுபோக்குக்காகப் பேசப்பட்டதென்றால், ஜாதி ஒழியவேண்டுமென்பதில் அவருக்கு உண்மையான நாட்டம் இருக்கிறதென்று எப்படி எதிர்பார்க்க முடியும்? டாக்டர் கட்ஜு ஒரு சாதாரண ஆளாக இருந்துகொண்டு இவ்விதம் பேசியிருந்தால், யாரும் அவருடைய பேச்சுக்குச் செவி சாய்த்திருக்கமாட்டார்கள். அவர், தம்மை ஒரு மந்திரி என்கிற அறிமுகத்தோடு பேசியதாலேயே நாமும் இதுபற்றிய சில கருத்துக்களை வெளியிட நேர்ந்தது.

சிலருக்கு அறிவு இருக்கிறது. அந்த அறிவு அவர்களை மன்றம் ஏற வைக்கிறது.

சிலருக்கு அதிகாரம் இருக்கிறது. அந்த அதிகாரம் அவர்களை அவை ஏற வைத்துவிடுகிறது.

சிலருக்கு அறிவும் அதிகாரமும் ஒருங்கே அமைந்துவிடுவதும் உண்டு. இப்படி அமைவது இக்காலத்தில் துர்லபம்தான் என்றபோதிலும், இப்படிப்பட்டவர்கள் அறவே இல்லை என்று உறுதியாகக் கூறிவிட முடியாது.

அறிவு அதிகம் இருப்பவர்களுக்கு அதிகார ஆசை அவ்வளவாக ஏற்படுவதில்லை என்பது பொதுவாகக் கூறப்படும் ஒரு நல்லபண்பு என்ற போதிலும், தங்களிடம் இருக்கும் அறிவால் நாட்டுமக்களுக்குச் செய்யப்பட வேண்டிய நல்ல காரியங்களுக்கு அதிகாரம் என்னும் ஊன்றுகோல், தேவை என்று தோன்றினால், அவர்கள் அந்த அதிகாரத்தைப் பெற்று அதன் வாயிலாகச் செய்யப்பட வேண்டிய சிறந்த காரியங்களைச் செய்வதில் சிறிதும் தயங்க மாட்டார்கள்.

டாக்டர் கட்ஜு அவர்களைப்பற்றிய பரிச்சயம் நமக்கு அவ்வளவாக இல்லாவிட்டாலும், அவருடைய அதிகார பலத்தால் இந்தக் காரியத்தைச் சுலபமாகச் சாதித்துவிடலாம் என்ற நம்பிக்கை நமக்கு நிச்சயமாக இருக்கிறது.

ஆனால், அவருக்கு ஜாதி ஒழிப்பில் சந்தேகமற்ற தெளிவு இருக்கிறதா? துணிந்து செய்வாரா? செய்ய முன் வருவாரா? என்பவை கேள்விக்குறியாகவே நமக்குத் தோன்றுகிறது. ஏனென்றால், ஜாதி ஒழிப்பின் அவசியத்தை வேகமான மொழியில் பேசிய டாக்டர் கட்ஜு அவர்கள், அதுஎன்றால் முடியக் கூடியகாரியமல்லவே என்ற ஒப்பாரியையும் பாடிவிட்டார்.

> "ஜாதி முறை என்கிற சாபத்தை இந்தியாவிலிருந்து ஒழிக்க வேண்டும்"

இது அவருடைய திட்ட வட்டமான முடிவு என்று மற்றவர்கள் அதாவது பொது மக்கள் கருத வேண்டுமென்பது அவரது ஆசை. அதே சமயத்தில் தம்மால் முடியாதென்பதையும் வெளியிட்டிருக்கிறார். தம்மால் என்றால், சாதாரண கட்ஜுவால் என்பதல்ல அதன் பொருள். டாக்டர் கட்ஜு போன்ற கையாலாகாதவர்களை மந்திரிகளாகக் கொண்ட சர்க்காரால் என்பது அதன்பொருள்.

> "சர்க்காரிடம் முறையிடுவதால் மட்டும் பிரயோசனமில்லை"

என்ற விளக்கத்தின் வாயிலாகச்சர்க்காரின் கையாலாகாத்தனத்தை எடுத்துக்காட்டுகிறார். சர்க்காரிடம் முறையிடுவதால் பிரயோசனமில்லை என்று கூறும் இவர், வேறுயாரிடம் முறையிடச் சொல்கிறார் என்பது தெரியவில்லை "ஜாதி ஒழியவேண்டும்—ஒப்புக் கொள்கிறோம்—ஆனால் சர்க்காரிடம் முறையிடாதே" என்று கூறுவது சாதாரண வாதத்துக்குக் கூட ஒத்து வாராத ஒன்றாகும்.

சர்க்கார்—இதற்கு இன்று வழங்கப்படும் பொருள் வேறு. முன்பெல்லாம் சர்க்கார் என்றால், தனி ஒரு மனிதனுடைய ஆணையை—கட்டளையைப் பிரதிபலிப்பதாக இருந்தது. இன்று அந்தநிலைபெரும்பாலும் மாறியும்—மறைந்தும் விட்டதென்றுகூடச் சொல்லலாம். அந்த அளவுக்குச் சர்க்கார் என்ற சொல்லுக்கு ஒரு தனிச் சிறப்பு ஏற்பட்டு விட்டது. இங்கில்லாவிட்டாலும், வேறுநாடுகளில் இதற்கு நல்லமதிப்புக் கொடுக்கப்படுகிறது ஆனால், இங்குதான் இதுபற்றி வளளாவப்பேசப்படுகிறது. வாய்ச் சொல்லில் வீரரடி!! என்ற பாரதியார் பாட்டை நடைமுறையில் செய்து காட்டாவிட்டால், அது, பாரதியாருக்குச் செய்யும் பாதகம் என்று கருதுவதால்தான் போலும் இவர்கள்



எதனையும் வாய்ச் சொல்லோடு மட்டும் நிறுத்திவிடுகிறார்கள்.

சர்க்கார்—இது, இன்று ஜனநாயகம் என்றழைப்புயர்வற்ற சொல்லோடு இணைந்து நிற்கும் ஒரு சொல்லாக மாறிவிட்டது.

சர்க்கார்—இது, இன்று உச்சரிக்கப்பட்டவுடனே ஜனநாயகம் என்ற சொல்தான் எவருக்கும் நினைவில் வந்து நிற்கிறது.

சர்க்கார்— எதேச்சாதிகார சர்க்கார்.

சர்க்கார்—ஜனநாயக சர்க்கார்.

எதேச்சாதிகார சர்க்கார் என்ற மோசமான நிலை, இன்று ஜனநாயக சர்க்கார் என்ற சிறந்த நிலைக்கு வந்திருப்பதற்குரிய காரணம், விளக்காமல் புரிந்து கொள்ளக் கூடிய ஒன்றாகிவிட்டது. மக்களின் ஏகோபித்த சுதந்திர வேட்கையே இதற்கு மூலகாரணமாகும்.

ஆனால், ஜனநயக சர்க்கார் என்ற வாக்கியத்தின் முழுப்பொருளையும் தந்து நிற்கும் நாடுகள் ஒருசிலதான் இருக்கின்றன. ஒரு சில என்றுகூறுவதுகூட மிகைப்படுத்திக் கூறுவதாகும். உண்மையாகக் கூறவேண்டுமானால், ஏதோஇரண்டொருநாடுகள் தான் ஜனநாயக சர்க்கார் என்பதை மதித்து நடக்கவேண்டுமென்ற தன்னடக்கத்தைக் கொண்டுள்ளன என்று துணிந்துகூறலாம்.

மற்ற நாடுகள்எல்லாம் ஜனநாயகம் என்ற போர்வைக்குள் மறைந்திருக்கும் எதேச்சாதிகார சர்க்கார்களாகவே காட்சியளிக்கின்றன.

இந்த விசித்திரமான ஜனநாயக எதேச்சாதிகார சர்க்கார்களின் முதல் வரிசையில் முதலிடம் பெற்று நிற்பது "நமது இந்தியா" தான் என்று கூறினால், அது தவறாகக் கூறப்பட்டது என்று ஜனநாயகம் அறிந்த எவரும் துணிந்து கூற மாட்டார்கள். இங்கே நடப்பது பெயரளவுக்கு ஜனநாயகம்தான் என்றபோதிலும், செயல் முறையில் எதேச்சாதிகாரமே நடைபெறுகிறதென்பது விவாதத்துக்கு இடமின்றித் தெளிவாக்கப்பட்ட ஒன்றாகும். என்றபோதிலும், இங்குதான் ஜனநாயகம், ஜனநாயகம் என்ற ஒலி அதிக அளவில் கேட்கப்படுகிறது. குறைகுடத்தில் கேட்கப்படும் ஒலிபோல் இங்கு ஜனநாயகத்தின் ஒலி கேட்கப்படுகிறது.

சென்னை மாகாணத்தைப் பொறுத்தவரையில் ஜனநாயகப் படுகொலைக்குக் காரணபூதராய் இருந்த ஆச்சாரியார், ஜனநாயகத்தின் தத்துவத்தை உணர்ந்தவர்களால் தூக்கி எறியப்பட்டுவிட்டார் என்ற மகிழ்ச்சி நமக்கு ஏற்பட்டிருக்கும் இந்த நேரத்தில்,

> "மக்கள் முன்னேறவேண்டுமானால். நாட்டு வளமும் உற்பத்தியும் அதிகரிக்கவேண்டும். இரண்டாவதாக நாட்டின் செல்வம் மக்களிடையே பரவியிருப்பதில் உள்ள ஏற்றத்தாழ்வுகள் அகல வேண்டும். பிறர் உழைப்பை உறுஞ்சும் சுரண்டலை அடிப்படையாகக் கொள்ளாத சமதர்ம அமைப்பை நிலைநாட்டுவதுதான் காந்தியத்தின் இலட்சியம்"

என்ற பிரகடனத்தோடு முதலமைச்சர் பதவியை ஏற்றிருக்கும் நண்பர் காமராஜரைக் காண மேலும் களிப்படைகிறோம். ஆச்சாரியார், ஆட்சிப்பீடத்திலிருந்து விரட்டப்பட்டதன் காரணம் எது என்பதை நாடறியச் செய்த கர்மவீரன் காமராஜர் இப்போது அந்த இடத்தில் உட்கார்ந்துவிட்டார். இவருடைய ஆட்சிக் காலத்தில் ஜனநாயகம் காப்பாற்றப்படும் என்றநம்பிக்கை, "பட்டுத்தேதிய" எஸ். எஸ் இராமசாமி (படையாச்சி) போன்றவர்களுக்கே இப்போது ஏற்பட்டிருக்கிறதென்றால், மற்றவர்களுக்கும் அந்த நம்பிக்கை ஏற்படும் என்று எதிர்பார்ப்பதில் தவறொன்றும் இருக்க முடியாது என்ற போதிலும் இது போன்ற அரசியல் நட்பங்கள் திடீரென்று முடிவு கட்டி விடக்கூடியவையல்ல — போகப் போகப் பார்த்தறியவேண்டிய பக்குவமான ஒரு அரசியல் நெருக்கடியோடு சம்பந்தப்படுத்தப்பட்டிருக்கும் தேசிய விவகாரமாகும். அவசரப்பட்டு முடிவு கட்டக்கூடிய விஷயமல்ல இது.

கண்ணியத்தின் காவலர் என்று கருதப்பட்ட ஓமந்தூரார் காலத்திலேயே கும்பகோணத்தைக் கண்டவர்கள் நாம்; ஆகையால் சந்தர்ப்பங்களும் சூழ்நிலைகளும் ஒருவரை எங்கெங்கு கொண்டுபோய் நிறுத்தும் என்பதனை நிச்சயித்துக் கூறிவிட முடியாது. என்றபோதிலும்,

> "முப்பது ஆண்டுகளாகப் பொதுவாழ்வில் ஈடுபட்டுள்ள நான் மக்களின் கஷ்டங்களையும் கவலைகளையும் அறியாதவனல்ல"

என்ற சூளுரையோடு பதவிப் பொறுப்பை ஏற்றிருக்கும் நண்பர் காமராஜரின் கருத்துகளுக்கு நாம் மதிப்புக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதைத் தவிர இப்போது வேறெதுவும் கூறுவதற்கில்லை. காரணம், அவர் சார்ந்திருக்கும் ஸ்தாபனம் அப்படிப்பட்டது.

*

ஜனநாயக நாட்டில் ஜாதிபோன்ற கொடுமைகளை ஒழிப்பதற்குரியவழி வகைகளை மக்கள் தான் செய்ய வேண்டுமென்று டாக்டர் கட்ஜு கூறுகிறார்—வரவேற்கிறோம். நாட்டில் செய்யப்படவேண்டிய எந்தச் சீர்திருத்தத்திற்கும் மக்களின் எழுச்சியும் கிளர்ச்சியும் தான் காரணம் என்பதை யாரும் மறுக்க முடியாது ஆனால், மக்களால் செய்யப்படும் நியாயமான கிளர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுத்து அவற்றைநடைமுறையாக்குவதற்குச் சர்க்காரின் சட்டமுர் ஒத்துழைப்பும் மிக மிக அவசியம் என்பது டாக்டர் கட்ஜு போன்ற பொறுப்பேற்றிருப்பவர்களுக்குத் தெரியாத விஷயமல்ல. என்றபோதிலும், சர்க்காரிடம் முறையிடுவதால்பிரயோசனமில்லை என்று கூறும் இவர்,

> "ஜனநாயகத்தில் மக்களே எசமானர்களானபடியால் சமூக—பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைச் சுயமாக அகற்றமுயல வேண்டும்"

என்றும் கூறுகிறார். ஜனநாயகத்தில் மக்கள்தான் எசமானர்கள் என்று கூறப்படுவது இன்று ஏட்டுச்சுரைக்காயாகவே இருக்கிறதென்பதை எவரும்மறுக்கமுடியாது. இன்றைய ஜனநாயகம் மக்களின் குரலுக்கு மதிப்புத் தருவதில்லை. மாறாக, அவர்களை, அதாவது, ஜனநாயக முறையில் நீதிவழங்கவேண்டும் என்று கேட்பவர்களை மிரட்டி அடக்கப் பார்க்கிறது, அல்லது "இதோ சிறை" என்று வழிகாட்டு

கிறது, அல்லது துப்பாக்கி முனையின் துவாரத்தை இன்றைய ஜனநாயக சர்க்கார் பெரியதாக்கி வைத்துக்கொண்டிருக்கிறது. இவற்றைத்தான் இன்றைய ஜனநாயக சர்க்காரில் காணமுடிகிறதே தவிர, மக்களை எசமானர்களாக மதிக்கும் மாண்பை மருந்துக்குக்கூடக் காண முடியவில்லை. இந்த இலட்சணத்தில் ஜனநாயகத்தில் மக்களே எசமானர்கள் என்று வாய்ச்சவடால் அடிப்பதில்மட்டும் குறைச்சலில்லை.

மக்களை எசமானர்களாக மதிக்க வேண்டாம்—மக்களை மக்களாகவே மதிக்கும் மாண்புபெற்றுவிட்டாலே இன்றைய ஜனநாயகம் ஓரளவுக் காவது காப்பாற்றப்படும்.

*

ஜாதியை அறிவிக்கும் சொல்லைப் பெயருக்கு முன்னாலோ அல்லது பின்னாலோ சேர்த்துக்கொள்ளக் கூடாதென்று கூறப்படும் வாதம், ஜாதி ஒழிவதற்கு முதல்படி என்று கருதப்பட்டாலும், அது, ஜாதி முறைபைவிலைபெறச்செய்து, குறிப்பிட்ட ஒரு இனத்தாரின் முன்னேற்றத்துக்கு வழிகோலுவதாக முடியும் என்பதும் இந்தச் சமயத்தில் சிந்தித்துப் பார்க்கவேண்டிய ஒன்றாகும்.

இந்த ஏற்பாட்டின்படி சி. இராசகோபால் என்ற பெயருடைய இரு வேறு ஜாதிக்காரர்கள் ஒரு வேலைக்கு மனுப்போடுகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அதாவது, சி. இராசகோபாலாச்சாரி என்ற பிராமணப் பையனும், சி. இராசகோபால் படையாச்சி என்ற பிற்பட்ட வகுப்பு இளைஞனும் S S L C. பரீட்சையில் தேறி சர்வீஸ் கமிஷன் பரீட்சையும் பாஸ்பண்ணி இருவரும் ஒத்த மார்க் வாங்கியபின், ஏதோ ஒரு சர்க்கார் வேலைக்கு மனுப்போடுகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். இன்றைய நிலையில், அந்த இருவரில் யாருக்கு அந்தவேலை கிடைக்கும் என்பதை யோசித்துப் பார்க்கும் நேர்மைசாலிகளுக்கு, பெயருக்கு முன்னாலோபின்னாலோ இருக்கும் ஜாதி அறிவிப்புச் சொல்லை அகற்றுவதால் ஏற்படும் ஆபத்து விளங்காமல்போகாது.

இன்றைய சர்க்கார் அலுவலகங்களில் இருப்பவர்கள் பெரும்பாலும் "அவர்கள்" ஆக இருப்பதால், சி. இராசகோபாலாச்சாரிக்குத்தான் அந்த வேலை கிடைக்குமேயொழிய, சி. இராசகோபால் படையாச்சிக்கு அந்த வேலை கிடைப்பது கஷ்டம்தான். இது, நாம் கண் கூடாகக் காணும் ஒரு மறுக்கமுடியாத உண்மை. ஆச்சாரியாரின் ஆட்சிக் காலத்தில், இந்த வேலை தரும்முறை சாளமாகநடைபெற்ற காரணத்தால், அதுபற்றிய சந்தேக விளக்கங்கள் சட்டசபையிலேயே கேட்கும் நிலைமை ஏற்பட்டது எல்லோருக்கும் தெரியும். எனவே, பெயரின் முன்னாலோ பின்னாலோ இருக்கும் ஜாதி அறிவிப்புக் குறியை நீக்குவதால்மட்டும், ஜாதிமுறை ஒழிந்துவிடும் என்று கூறிவிட முடியாது. அதோடு, பெயருடன் ஜாதி அறிவிப்புக்குறியை இணைப்பதால் ஒரு குறிப்பிட்ட இனம் மேலேசென்று கொண்டிருக்கும் வழியும் துண்டிக்கப்பட்டுவிடாது. எனவே, பெயரோடு சேர்க்கப்படும் ஜாதி அறிவிப்புக் குறி பெயரளவில் ஜாதி ஒழிப்புக்கு வழிகோலுவதாக இருக்க முடியுமே தவிர, உண்மையானஜாதி ஒழிப்புக்கு, அது உதவி செய்யும் என்று கருத முடியாது.

*

சனாதனிகளால் கூட்டப்படும் மாநாட்டுக்குச்சென்றால், சனாதனம் காப்பாற்றப்பட்டால்தான் ஜனநாயகம் காப்பாற்றப்படும் என்று பேசுவதும், பிற்பட்டவகுப்பாரால் கூட்டப்படும் மாநாட்டுக்குச் சென்றால், ஜாதி ஒழிந்தால்தான் ஜனநாயகம் காப்பாற்றப்படும் என்று பேசுவதுமாகக் காலம் நடத்தினால், அது வெறும்பேச்சலங்காரமாக முடியுமே தவிர உண்மையான முன்னேற்றத்தை ஒருபோதும் காண முடியாது.

கபிலர், சிவவாக்கியர் காலத்திலிருந்து இராமலிங்க அடிகளின் காலத்தையும் கடந்து இன்றுவரை ஜாதி ஒழிப்புப்போராட்டம் நடந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனாலும் ஜாதிமுறை ஒழியவில்லை—வளம் பெற்று வளர்ந்து கொண்டுதான் வந்திருக்கிறது—வருகிறது.

வணிககுலத்தில் தோன்றிய காந்தியடிகளுக்குச் சம்மந்தியாகும் அரிய வாய்ப்பைப்பெற்றபின்னரும் ஆச்சாரியார் தம்மை ஒரு பிராமணன் என்று சொல்லிக்கொள்வதில் ஒரு தனிப்பெருமிதம் கொள்கிறார் என்றால், ஜாதியை ஒழிப்பதில் எந்த முறையைக் கையாளவேண்டுமென்பதை டாக்டர் கட்ஜூ போன்ற அரசியல் அதிகாரம் பெற்ற அமைச்சர்கள் யோசித்துப்பார்க்க வேண்டுமென்பதற்காகவே இதனை எழுதுகிறோம்.

கடந்த முப்பதாண்டுகளுக்கு மேலாக நாம் செய்துவரும் ஜாதி ஒழிப்புப் பிரசாரத்தின் பயனாகத் தென்னாட்டைப் பொறுத்தவரையில், ஓரளவு ஜாதிமுறையின் வேகம் குறைந்திருக்கிறதைக் காணும்பொழுது நமக்குச்சிறிதளவு களிப்பு ஏற்பட்டபோதிலும், அரசியலாரின் ஒத்துழைப்பு இல்லாத காரணத்தால், அதன் முழுப்பயனையும் பெறமுடியாத நிலையிலேயே இன்னும் நாடு இருந்துகொண்டிருக்கிறது.

ஜாதி ஒழிப்புப்பிரச்சாரம் நடத்தும் நம்மை 'நாத்திகர்கள்' என்று நாக்கூசாது கூறும் 'நல்லறிவாளர்'கள் கையில் நாட்டின் ஆட்சிப் பொறுப்பு அகப்பட்டுக்கொண்டிருக்கும் வரையில், ஜாதி ஒழிப்புப் போன்ற நல்ல காரியங்களுக்கு அவர்களின் ஆதரவும் ஒத்துழைப்பும் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பது ஏமாற்றத்துக்கு ஏணிப்படி அமைத்துத் தருவது போலத்தான் முடியும்.

★

நெல்லை மாவட்ட தி. மு. கழக
**மாவட்டக்குழு அழைப்பு**

சங்கரநயினார்கோவிலில் 18—4—54-ல் ஞாயிறு காலை 9-30 மணிக்கு நெல்லை மாவட்ட தி. மு. கழகப் பொதுக்குழு கூட்டம் நடக்கவிருப்பதால் கிளைக் கழக பிரதிநிதிகள் தவறாது கலந்து கொள்ளவேண்டுகிறேன்.

வரவு செலவு கணக்கு, நிதியளிப்பும் மாவட்ட மாநாடு பற்றிய முடிவுகள் செய்யப்படும்.

வீரபாகு
செயலாளர்.



# 'மெய்ஞ்ஞானம் கண்டான்!'

"ஞானப் பயிர்தனை என் மனதில் நாட்டவேண்டும் — என்றார், தாயுமானவர்! என்னேஉருக்கம்!என்னே பக்தி! சித்தர்களும் முத்தர்களும் இச்சிற்றின்ப லோகத்தைவிட்டு பேரின்பம் காண முயன்றார்கள் என்றால், அந்தப் பேரின்ப சக்தியின் பெருமையினைக் கூறவும் கூடுமோ? இகலோக இச்சைகளில், ஏ, மனிதா!—நீ, கிடந்துழலாதே. இது சாசுவதமல்ல — பிடி சாம்பலாகக் கூடிய உடல், உன்னுடையது. இதைப் பிடித்துக்கொண்டேன் அலைகிறாய்? ஞானப்பயிர்தனை, உள்ளத்தில், வளர்ப்பாய்! மெய்ஞ் ஞானம் நாடிச் செல்வாய்!! பிறகு சொர்க்கம் உன்னை விரும்பி அழைக்கும். அதன் கதவுகள் உனக்காகத் திறந்து வைக்கப்பட்டிருக்கும். அந்தச் சொர்க்கத்தின் மகிமையைச் சொல்லவும் முடியுமோ! அதனை அடையவதே பெறற்கரிய பேறு!! அங்கு வாழ்வதே, நிரந்தர இன்பம். ஏ, மானிடர்களே! மண்ணில் கிடந்துழலும் புழுக்களே!! தேடுங்கள் சொர்க்கத்தை. செல்லுங்கள், சொர்க்கப் பாதையில். வெல்லுங்கள், காமக்குரோதத்தை"

*

சைவப் பழம் சச்சிதானந்தரின் சொன்மாரி கேட்ட பக்தர் குழாம், பலமாகக் கை தட்டினர்! வேலன், விசாரத்திலிடுபட்டான்!! அவன் மனதில், 'இத்தனை காலும் இந்த சொர்க்கத்தைத் தேடி அலையாமல், வாழ்நாளை, வீணாக்கிவிட்டோமே' எனும்விசாரம்மோதிற்று. பக்தர் குழாத்தைப்போல, இது போன்ற சொன்மாரிகளைப் பல முறை கேட்டதில்லை, அவன்! ஒய்வேது அவனுக்கு. குடிசையில் மழை பெய்த காரணத்தால், ஒண்ட வந்தான், இன்று! சொன்மாரிகேட்டான்!! ஞானப் பயிர்தனை நாட்டி—சொர்க்க லோகப் பாதையைத் தேடச் சொன்ன சச்சிதானந்தர்,

பிரசங்கம் முடிந்து, வந்த காணிக்கைகளை எடுத்துக்கொண்டு, சிஷ்ய கோடிகளுடன் காரிலேறிச்சென்று விட்டார். பக்தர் குழாம், போய்விட்டனர். ஆனால், வேலன்மட்டும், விசாரத்தில் கிடந்தான். பிடி சாம்பலாகக்கூடிய உடலை நம்பி, இத்தனை வருஷங்களை வீணாக்கிவிட்டோமே! என்கிற வேதனை, அவன் முகத்தில் படர்ந்தது. 'மெஞ்ஞானம் நாடிச் செல்வாய்! என்ற போதம், முழங்கிற்று காதுகளில் 'பெறற்கரிய பேற்றினை இழந்தாய், மனிதா!' எனும் கீதம், ஒலித்தது, இதயத்தில். நீண்ட நேரம் யோசித்தான். ஞானப் பயிரை வளர்க்காமல், கேவலம் நெற்பயிரை வளர்ப்பதில்,காலத்தையும் நேரத்தையும் கழித்துவிட்டோமே, எனும் கலக்கத்தால் தள்ளாடினான்! 'ஏதோ—பெரிய ஆபத்தில் அகப்பட இருந்தோம். நல்லவேளை! இன்று வந்தோம். கேட்டோம் தப்பித்தோம். சர்வேஸ்வரா! அம்மையப்பா!! இனியாவது சொர்க்கலோகப் பாதைக்குப் பாடுபடுகிறேன்.' என்று ஆண்டவன் முன்விழுந்து நமஸ்கரித்துவிட்டுப் புறப்பட்டான்—போய்க்கொண்டே இருந்தான்.

*

"யாரப்பா, நீ?"

"சுவாமி! நாடு துறந்து, ஏடும் கையுமாய், எப்போதும்ஈஸ்வரனைத் தியானம் செய்தபடி இருக்கும் தங்களது பாதகமலங்களை நமஸ்கரிக்கிறேன். என்னைச் சிஷ்யனாகஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன்"

"தன்யனானாய்! வா, உட்கார்"

"தேவா! ஞானப்பால் அருந்தாமல் மோசம் போனேன், நான். முக்தி மார்க்கம் அறியாமல், திண்டாடினேன், இத்தனை நாள். தாங்கள்தான் என்னைக் கரையேற்ற வேண்டும்."

"ஐயன் சித்தம், அப்பனே, கேள், உனக்குள்ள சந்தேகத்தை"

"சொர்க்கம் கிடைக்கவேண்டும் எனக்கு! அதற்குள்ள மார்க்கத்தை உரைக்கவேண்டும் நீங்கள்!!"

"ஓ! அதுதானே, எனக்கு ஆண்டன் அளித்திருக்கும் பணி"

"என்னசெய்யவேண்டும், நான்?"

"ஈசுவரனை எப்போதும் தியானம் செய்யவேண்டும்"

"செய்கிறேன்!"

"அவன் பெருமைகள் அனந்தம். அவைகளையெல்லாம், முதலில் அறிந்துகொள்ளவேண்டும்"

"அப்படியே தேவா!"

"அதற்கு வியாசர் பெருமான் அருளிச்செய்த பதினெண் புராணங்களின் மகத்துவங்களை அறிய வேண்டும்"

"சித்தம், குருவே!"

"முதலில் தெரிந்துகொள், பதினெண் புராணங்களின் பட்டியலை!—

பிரம்மாண்ட புராணம்
பிரம்ம வைவர்த்த புராணம்
மார்க்கண்ட புராணம்
வபிஸ்யாத புராணம்
வாமன புராணம்
பிரம்ம புராணம்

ஆறு ஆயிற்று, அல்லவா?"

"ஆமாம்!"

"இதையும் எண்ணிக்கொள்!—

விஷ்ணு புராணம்
நாரத புராணம்
பாகவத புராணம்
கருட புராணம்
பத்ம புராணம்
வராக புராணம்

இது ஒரு ஆறு. எண்ணிக்கொண்டாயா?"

"எண்ணிக்கொண்டேன். ஆறும் ஆறும் பன்னிரண்டு"

"இன்னும் ஒரு ஆறு!—

மத்சய புராணம்

கூர்ம புராணம்
லிங்க புராணம்
பாஹ்ய புராணம்
ஸ்காந்த புராணம்
அக்னி புராணம்
மொத்தம் பதினெட்டு ஆயிற்றா
லவா?''

''ஆயிற்று குருவே!''

''இதில் முதல் ஆறும் பிரம்மனைப் பற்றியவை—இரண்டாவது கூறிய ஆறும் விஷ்ணுவைக் குறித்தவை—மூன்றாவது கூறிய ஆறும் சிவனைக் குறித்தவை''

''இவைகள் எல்லாவற்றையும் வியாசர் ஒருவரேதான் எழுதினாரா, தேவா?''

''ஆம்! அவரே! அவரே!!''

''ஒரு சந்தேகம்......?''

''சந்தேகமா?''

''ஆமாம்! கடவுள் ஒருவரைப் பற்றி நான் தெரிந்துகொள்வதா? மூன்றுபேரைப்பற்றியா? எந்தக் கடவுள்வசம் சொர்க்கம் இருக்கிறது? அந்தக் கடவுளைப் பற்றி அறிய நான் என்ன செய்யவேண்டும்?''

''துஷ்டா! துன்மார்க்கா!! ஆஸ்திகப் போர்வையில் வந்த நாஸ்திகப் பதரே! அகன்று செல், இதை விட்டு. அப்பனே, போ''

*

வேலன் பெற்ற முதல் பரிசு இது! குருநாதரின் கோபாக்கினியை அறியமுடியவில்லை, ஆவலால். ஆண்டவனை நாடிச்சென்று அவருக்குச் சொந்தமான சொர்க்கத்தில் இடம் பெறச் சென்ற அவனுக்கு இப்போது புதிய வேலை கிடைத்தது! மூன்று கடவுள்கள், அவர்களில் யாரிடம் சொர்க்கம் இருக்கிறது? எப்படிச் செல்வது அங்கு! புறப்பட்டான், அதனை அறிய.

*

''சொர்க்க லோகம் செல்லும் மார்க்கம் ஒன்று சொல்கிறேன், கேள். சிவனைசொர்க்கத்தின் பிதா! அவனைப்பற்றி கூர்ம புராணம் சொல்கிறது...''

''என்ன சொல்கிறது?''

''சிவனைத் தவிர பிறதேவர்களை உபாசனைசெய்யும் அரசனும் நாடும் ரௌரவ நரகத்தை அடையும். சிவ பூஜையைத் தவிர்த்தவர்கள் கள்ள புருடனை அடையும் ஸ்திரியைப் போலாவார்கள்''

''அப்படியா!''

''ஆமாம்! அய்யனின் பெயரை ஜபித்து மெய்வழி பெற்றோர், ஏராளம். அவர் இருக்கும் கைலாசம் தேஜோ மயமானது. தலையிலே கங்கை! பக்கத்திலே பார்வதி! சூழ்ந்திருக்க தேவகணங்கள்! அவர் பெருமை, சொல்லவும் முடியுமோ? வீணைகளைக் கூறவும் முடியுமோ?''

''அவரை நினைத்து, வழிபட்டால் சொர்க்கம், இலகுவாகக் கிடைக்கும்?''

''நிச்சயம் கிடைக்கும்''

*

வேலன், களிப்போடு, அமர்ந்தான் ஒருமரத்தடியில், சிவனின் பெயரை ஜபித்தபடியிருந்தான்! யாரோ. அவனைத் தட்டியதுகேட்டு, விழித்துப் பார்த்தான். ஒருவிஷ்ணு பக்தர் கோபத்தோடு நின்று கொண்டிருந்தார் — பேசினார், பிறகு.

*

''மூட மனிதா! சுடுகாட்டானைப் பற்றி ஸ்தோத்திரம் செய்கிறாயே— இதனால் என்ன பலன் கிடைக்குமென எண்ணுகிறாய்?''

'சொர்க்கம் செல்ல மார்க்கம் காண்கிறேன்!''

''அடப்பாபமே! யாரோ, உன்னை ஏமாற்றியிருக்கிறார்கள்'' நீ, பத்ம புராணம் படித்ததுண்டோ?''

''இல்லை!''

''சொல்கிறேன் — கேள். விஷ்ணுவைவிடச் சிறந்தவரும் உயர்ந்தவரும் உலகத்தில் இல்லை. விஷ்ணுவினாலேயே எல்லோரும் மோக்ஷத்தை அடைகின்றார்கள். விஷ்ணுவைத் தவிர வேறு தேவதையைப் பூசைசெய்பவன், சண்டாளனாகிறான்''

''ஐயோ! அப்படியா?''

'பிறகென்னவாம்? அந்தப் பேயாண்டி சுத்த மோசக்காரன்! தன்னைத் துதித்த ரிஷிபத்னிகளை யெல்லாம், கெடுத்த ஆளாச்சே''

''அப்படியா?''

''ஆமாம். அவனைத் துதித்து, வீணாகாதே. விஷ்ணுவை வணங்கு— அவர் நாமத்தைப் பஜி. வைகுந்தம் கிடைக்கும்! அதுவே, சொர்க்கம்! அதுவே, மோட்சம்!!

*

வேலன், புதுத்தெம்பு பெற்றான். விஷ்ணுவின் பெயரைச்சொல்லி, ஜபிக்க ஆரம்பித்தான், நீண்டநேரம் அப்படியேயிருந்தான். யாரோ, அவனைத்தட்டினர்! விழித்தான்.

*

''தம்பி நல்லவனாகத் தென்படுகிறாய். உனக்கேன் இந்தக் கோலம்?''

''மோட்சம் செல்லவேண்டும் நான்!''

''அதற்கா, அந்தப் பெயரைச் சொல்லுகிறாய்?''

''ஆமாம்!''

''விஷ்ணு, யார் தெரியுமா? கண்ட பெண்களைக் கற்பழித்த காமுகன்!''





''யார் சொன்னது?''

''நான் சொல்லவில்லை! புராணங்கள் சொல்லுகின்றன!!''

''இப்படியா?

''ஆமாம்''

'சிவனைத்துதித்தேன்! இப்படித்தான், சொன்னர், அவர். பிறகு விஷ்ணுவைத் துதிக்கிறேன்! இப்படியே சொல்கிறீர்கள், நீங்கள். சிவன்—விஷ்ணு. மிச்சமிருப்பது பிரம்மா! அவரை நாடினால் சொர்க்கம் கிடைக்கும். அதைத்தானே, நீங்கள் சொல்கிறீர்கள்?''

''இல்லையப்பா! அதைச் சொல்ல வரவில்லை!—சிவன், விஷ்ணு, ஆகியவர்களைப் பற்றி என்னஎழுதப்பட்டிருக்கிறதோ, அதேதான் பிரம்மாவுக்கும் கூறப்பட்டிருக்கிறது.''

''என்ன?''

''கேள்! பார்வதியின் மணத்தைக் காணச் சென்றிருந்த பிரும்மாவிற்கு அவள் பாதங்களைக் கண்டவுடன் இச்சைகொண்டு விட்டாராம்— சொல்கிறது தர்மசம்ஹிதை. கிருஷ்ணன் ஆடுமாடுகளை மேய்க்கக் கானகத்திற்குச் சென்றிருக்கையில் பிரம்மா அவைகளைக் களவாடிச் சென்று விட்டாராம்— படித்திருக்கிறேன், பாகவதத்தில்''

''போதும்! போதும்!! ஒவ்வொரு கடவுளைப்பற்றியும் இப்படியே இருக்கிறதே. எதைத்தான், நம்புவது? எப்படி மோட்சத்தைப் பெறுவது? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!''

''உன்னுடைய ஆசை, என்ன?''

'சொர்க்கப்பாதை நாடுகிறேன்! அங்கே செல்ல மார்க்கம் தேடுகிறேன்!!—ஏன், சிரிக்கிறீர்கள்?''

''வேறென்ன செய்வது? தேடு! தேடு!! முடிவில் அறிவாய்''

*

திகைப்போடு உட்கார்ந்திருந்த வேலன் எழுந்தான். கோயில் மண்டபத்தில் விளக்கவுரை தந்த பக்தரின் ஊருக்குச் சென்றுவது, சொர்க்கம் செல்லும் மார்க்கத்தை அறிய வேண்டுமென்ற ஆவல், அவனை உந்தியது. மாதங்கள் பல ஆகிவிட்டதால், கந்தலாடையும், ஜடாமுடியும், அவனுடைய தோற்றத்தில் கலந்தன. ஆறு, ஊர், மலையெனக் கடந்து, சச்சிதானந்தரின் ஊருக்குள் சென்றான். பசியும் களைப்பும் அவனைத் தாக்கின. ஒரு வீட்டுத் திண்ணையில் அமர்ந்தான். அந்த வீட்டு அம்மணி. அவனைக் கண்டு பரிதாபப்பட்டாள். வேலைக்காரியைவிட்டு எழுப்பினள். சோறு போட்டாள். சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போதும் அவனுக்கு, சொர்க்கலோகத்தைப்பற்றிய எண்ணம் போகவில்லை. எங்கே சொர்க்கம்? எப்படிச் செல்வது அங்கே?— என்று சிந்தித்தபடியே உணவருந்திக்கொண்டிருந்தான். சொர்க்கத்துக்கு மார்க்கமறிய தான் பட்ட கஷ்டங்களைப்பற்றி எண்ணினன். அப்போது, வெளியில் தாரை முழக்கமும் சங்கூதலும் கேட்டது. அதைக் கேட்ட வீட்டு அம்மணி வேலைக்காரியைக் கேட்டாள்.

''என்ன சப்தம்? யாரோ, போய் விட்டார்கள்போலிருக்கிறதே?''

''ஆமாம், அம்மா!''

''அந்தப் பிணம் சொர்க்கத்துக்குப் போகிறதா? நரகத்துக்குப் போகிறதா?, என்று பார்த்து வா!''

வீட்டுக்காரியின் வார்த்தையைக் கேட்ட வேலன், திடுக்கிட்டான். சொர்க்கம், நரகம் பற்றி அறிய இவ்வளவு கஷ்டங்களைப்பட்டோம்— செத்தவர் பிணம், சொர்க்கத்துக்குப் போகிறதா, நரகத்துக்குப் போகிறதா என்பதை இவ்வளவு எளிதாக இந்த அம்மையார் கேட்கிறார்களே — என்றும் வியப்பால், அப்படியே இருந்தான்!

வெளியில் சென்று பார்த்து வந்த வேலைக்காரி, 'அந்தப்பிணம் நரகத்துக்குத்தானம்மா, போகிறது!' என்று வெகு அலட்சியமாகச் சொல்லிவிட்டு உள்ளே போனாள்.

வேலன், திகைப்பு அதிகமாயிற்று! அதனைக் கண்ட வீட்டு அம்மணி, விபரம் கேட்டாள்!!

''அம்மா! இத்தனை நாளாக நான் சொர்க்கம்பற்றி அறியவே, அலைந்து கொண்டிருக்கிறேன். வெளியில் போகும் பிணம், எங்கேபோகிறது? —என்று தாங்கள் கேட்டீர்கள், வேலைக்காரி, 'நரகத்துக்கு!' என்று சொல்லிவிட்டுப்போனாள். எப்படியம்மா, கண்டுபிடித்தீர்கள்?''

வீட்டுக்கார அம்மணி, சிரித்தாள்! பிறகு, சொன்னாள்—''ஐயா! ஒருவர் செத்துப்போய்விட்டால், 'ஐயோ! அவர் போய்விட்டாரே!' என்று ஊரார் வருந்தினால், அவர் சொர்க்கத்துக்குப் போகிறார், என்று அர்த்தம். 'பாவி, தொலைந்தானா?' என்று பெருமூச்சுவிட்டால், அந்த ஆள் நரகத்துக்குப்போகிறார், என்று அர்த்தம்''

வேலனுக்கு, இப்போது, சிந்தை தெளிந்தது! சொர்க்கம், நரகம், பூமியில்தான்! — பூமியில்தான்!!— என்று, சொல்லிக்கொண்டபடியே, எழுந்தான். அந்த அம்மணிக்கு நன்றி தெரிவித்துவிட்டு, ஊரை நோக்கிப் புறப்பட்டான். வழியில், நரகத்துக்குப் போவதாக வீட்டுக்காரி சொன்ன பிணம், எரிந்து கொண்டிருந்தது! பிணம், வேறு யாருடையதுமல்ல — சைவப்பழம் சச்சிதானந்தருடையதுதான்!!

★

## வாழ்த்தும் வணக்கமும்

தாயகத்தின் விடுதலைக்காக, மழலையின் மொழியையும் மனைவியின் காதலையும் மறந்து, பெற்றோரிடம் விடைபெற்ற வண்ணம், அறப்போரில் ஈடுபட்டு, ஆளவந்தாரின் வெறியாட்டத்துக்கு இரையாகி, சிறைச்சாலைக்குள்ளே கிடக்கும், தாயகத்தின் கண்மணிகளாம் நம்முடைய சகோதரர்களுக்கு, நம்முடைய வாழ்த்துதல்களையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறோம். வாழ்க, வீரர்கள்! ஒழிக அடக்குமுறை!!


திராவிடநாடு

காஞ்சி] 18—4—54 [ஞாயிறு


# புலியும் புள்ளிமானும்!



கலந்தாலோசிக்கவில்லை! —என்று புதிய அமைச்சராகியிருக்கும் நண்பரைப்பற்றி எழுதியிருக்கிறது, 'மெயில்' இதழ்.

நேற்றுவரை காங்கிரசை எதிர்த்துக் கச்சைகட்டி நின்று மக்களின் வாக்குகளைப் பெற்றவர், அந்த மக்களைக் கலந்தாலோசிக்காமல், மந்திரிப் பதவி யென்றதும் ஒப்பலாமா? —கேட்கிறது அது.

இந்த முறைகள், வளர்ந்துவரும் ஜனநாயகத்துக்கு ஊறுசெய்யுமே! —எனவும், கவலை தெரிவிக்கிறது. காங்கிரஸ் கட்சியின் வேலைத்திட்டங்களை ஒப்புக்கொள்ளாது தனிக் கட்சியமைத்தோர் எப்படி இன்று சேர மனம் ஒப்பினர்? — என்றும் கேட்கிறது, ஆச்சரியத்தோடு.

அதற்கென்ன தெரியும்? ஆட்சியிலிருக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் ஜனநாயகத்துக்கும், ஆரம்பமுதலே தீராத பகையென்பதை! கொல்லைப்புற வழியில் கோலோச்சவந்த குல்லுகப்பட்டரையும், அதற்காக 'விபீடண' படலத்தை அவர் துவக்கிய வரலாற்றையும், அன்றுமுதல் இந்த நாட்டில் 'நேர்மை'க்கும் 'தூய்மை'க்கும், அரசியல் வாழ்வில் பொருளற்ற அகராதி புதுப்பிக்கப் பட்டதையும், நாடு அறியும்.

அதே பாதை, இப்போதும் வகுக்கப்பட்டிருக்கிறது!

இலட்சியம் அமைச்சர் பதவியேயன்றி, ஜனநாயகத்தைப்பற்றியா!!

மக்கள் மன்றத்துக்கும் நேர்மைக்கும் மதிப்பளிக்கப்படவேண்டுமென்றால், இதுபோன்ற நிகழ்ச்சிகளா, நடக்கும்? தோற்கடித்தவர் தோழனாவதும், மக்களால் விரட்டப்பட்டவர் மந்திரியாவதும், எதிர்க்கட்சி நேசக்கட்சி ஆவதும், அதற்கோர் புது வியாக்யானம் சிருஷ்டிக்கப்படுவதும் இங்கன்றி எங்கே காணமுடியும்!

ஆறாண்டு கால காங்கிரஸ் ஆட்சியில் என்னென்ன அலங்கோலங்கள் நடைபெற்று வருகின்றன. எவ்வளவு பெரிய கட்சி, அது! இன்று, ஆந்திரத்தில் பிரகாசத்துக்கு பின்னேடும் பிள்ளையாகவும், கேரளத்தில் தாணுப்பிள்ளைக்கு முன்னேடும் பிள்ளையாகவும், தமிழகத்தில் தாவித்தாவிப் பழகும் அணிப்பிள்ளையாகவும், அக்கட்சி ஆட்டம்போடும் அழகைக் காணக் கண் கோடி வேண்டுமே!

ஜனநாயகத்தை வளர்க்கவேண்டும்—நாம்தானே அதற்கு வழிகாட்டியாக இருக்கவேண்டும் — என்ற நல்லெண்ணம் காங்கிரஸ் தலைவர்களுக்கிருந்திருந்தால், தோற்ற சந்தானமும், குமாரசாமி ராஜாவும் கவர்னராகி இருப்பார்களா? வெற்றி பெறாமல் போன பக்தவத்சலம்தான் மேல்சபைபெம்பராகி, மந்திரியாக இருக்க முடியுமா?

'ஜனநாயகம்' காங்கிரஸ் கட்சியினருக்கு அக்கிரமங்களை மறைக்கும் திரையாகி இருக்கிறது.

அதனை புரிந்துகொள்ளாமல் 'மெயில்' கூறுகிறது, "டில்லியிலிருப்போர், மந்திரிசபை அமைப்பு விஷயத்தில் நடந்துகொண்ட முறை ஜனநாயகம் விரும்பும் நல்லோர் மனதில் திகைப்பை மூட்டியது" என்பதாக. காமராஜரைக் கேவலம் ஒரு ஜூனியர் பிராஞ்சு மானேஜரைப்'போல நடத்திற்றும், டில்லி. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக மந்திரிசபை அமைக்கும் விஷயத்தில் அவர் பறந்ததைக்குறிப்பிடுகிறது மெயில். அதிலென்ன ஆச்சரியம்! தொடர்ந்து நடைபெறும் காட்சிதானே, அது. ஓமந்தூரார் ஆட்சிக்காலத்தில் அடிக்கடி பறந்து செல்வதற்காக 'ஆகாய விமானம்' ஒன்றையே வாங்கினார்களே!!

சுயநலக்காரரும், சூதரும், ஆதிக்கபுரியினரும், அட்டகாசம் செய்வோரும் இன்று அதன் போர்வையிலே பற்பல கேடுகளுக்குக் காரணமாகி இருக்கிறார்கள்.

அழகான புள்ளிமான்! அகப்பட்டிருப்பதோ, புலிகள் கையில்!! நேர்மையையும் நீதியையும் எங்கிருந்து எதிர்பார்க்கமுடியும்?

'சந்தர்ப்பம் வாய்த்தது — கிடைத்ததை அனுபவிப்போம்' எனும் எண்ணத்துக்கு நல்லோரையும், தன் வாயிலே போட்டுக்கொள்கிறது, இந்தப் புலி. அவர்களது இரத்தத்திலே ஆதிக்கம் செலுத்த வேண்டுமெனும் தன்னுடைய இச்சையைத் தீர்த்துக்கொள்ள எண்ணுகிறது! அதனால்தான் நேற்று எதிர்க்கட்சியினராக இருந்தாலும்—தேர்தலில் தங்கள் கட்சியினரைத் தோற்கடித்தவராயிருந்தாலும் — தன்னுடைய காரிய சித்திக்காக கைலாகு கொடுத்து, அருகே அமர்த்துகிறது.

இந்தப் புலியின் வாயில், மக்களின் தொடர்பைப்பெற்ற புள்ளிமான்களும் விழுகின்றன.

இந்தக் கட்டம், அரசியல் வாழ்வில் வளர்ந்துகொண்டேபோவது, விபரீதமானதுதான் — நல்லோர் நாணக்கூடிய ஒன்றுதான்.

அதைக்கண்டு, 'மெயிலைப்'போலவே தனைப்பட்டுக்கொள்வதாலோ, விளக்க முரைத்து விடுவதாலோ, கோரப்புலியைக் கொல்லமுடியாது; நாட்டில், 'பிராஞ்சு மானேஜர்கள்' நிலைமையையும ஒழித்திட முடியாது.

'காங்கிரஸ்' எனும் இந்தப் புலிக்கு முடிவு கட்டப்படும்வரை, ஜனநாயகம் செழிக்கமுடியாது. இதனை, கண்டுவருகிறது, மக்கள் மன்றம்—ஒன்றன்பின்னொன்றாக. அந்த மக்கள் மன்றத்தை மதியாது, அவர்களையும் கலந்தாலோசிக்காது, புலியின் வாயில் போய்விழும் 'புள்ளிமான்கள்' கதி, பரிதாபமாகும். அதனை எண்ணும்போது, அமைச்சர் அவையில் அங்கமேற்கும் 'புதியவருக்காக' அனுதாபப்படுகிறோம். அவர்மீது குறைகூறிப் பயனில்லை!—நாடே, புலிகளின் காடு, இன்று. அதன் சொட்டம்தான், ஆங்காங்கும். அதனால்தான், எப்படியாவது வாழவேண்டுமென, ஒருசமயம் வாலைக் குழைத்தும், பக்கத்தில் வந்தும், பாசத்தைக் காட்டியும் பழகுகிறது. அதன் உண்மையை உணராது, நம்மனோர் இன்று ஆனந்தமடைகிறார்கள். அழைத்தால் போய் நிற்கிறார்கள். ஆனால், ஆபத்து என்னும் இருக்கிறது. டில்லிப் புலி அது—இரத்த வேட்கைத் தணியும்வரை, புள்ளிமானை விடாது; ஓடாது.

★

# தாழாத தஞ்சை

தஞ்சை மாவட்ட மாநாடுகளின் பெருமையைக் கண்டோர் வியப்புறுவர்! அவ்வண்ணம் அலங்கரிக்கப் பட்ட பந்தலில், இசைமணி சிதம்பரம் ஜயராம் இன்னிசையுடன் துவங்கிய இரண்டு நாள் மாநாடுகளும் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக அமைந்தன. சுயமரியாதை இயக்கச்சுடர்மணியாம் அழகிரியின் கல்லறைக்குக் கண்களிருந்தால், ஆனந்தக் கண்ணீர் சொரிந்திருக்கும். அவ்வளவு அற்புதமான வகையில், கொள்கை முழக்கம் கேட்டது. சமூக சீர்திருத்த மாநாடு, தோழர் அன்பழகன் துவக்கிவைக்க, தோழர் எ. கோவிந்தசாமி எம். எல். ஏ. தலைமையிலும், தி. மு. க. 2வது மாவட்ட மாநாடு தோழர் சம்பத் துவக்கிவைக்க, தோழர் என். வி. நடராசன் தலைமையிலும் நடைபெற்றது. இரண்டு மாநாடுகளிலும், பொதுச்செயலாளரும் கழக முன்னணி வீரர்களும் பேசினர். முதல் நாள் இரவு 'காதல் ஜோதி'யும், இரண்டாவது நாள் 'ஓர் இரவும்' நடைபெற்றன—நடிப்புப் புலவர் கே. ஆர். ராமசாமியும் அவரது குழுவினரும் பங்கேற்றனர்.

சீரும் சிறப்புடன் நடைபெற்ற இவ்விரண்டு மாநாடுகளும், நமது வெற்றியின் சின்னங்களாகும்!

செயலிலும் வீரத்திலும் முன்னணியிலிருக்கும் தஞ்சைத் தரணியில், அறிவுச் செல்வங்களாய் உலவும் நமது கழகக் காளையர் ஏராளம். குக்கிராமம் — பட்டிக்காடு— அரசியலே அறியாத ஊர்—அங்கெல்லாம், உழவர்பெருமக்களும் தொழிலாளத் தோழர்களும் ஏராளமாகத் திரண்டு வருகின்றனர். எப்போதுமே, தஞ்சை, இதுபோன்ற விஷயங்களில் தாழாது. இன்று, இபக்கத்துக்கென எண்ணற்ற இளங்காளைகள், தம்மை ஒப்படைத்திருக்கும் போது, இனி என்ன கவலை.

அந்த அருமைத் தோழர்களின் அகம் காட்டும் முகங்களையெல்லாம், தஞ்சைமாநகரில் கண்டோம். மகிழ்ந்தோம். பொதுவாழ்க்கையில், அண்ணன் தம்பிபோலப் பழகும் இடக்கத் தோழர்களைக் காணும் போது ஏற்படும் ஆனந்தத்துக்கீடு உண்டோ!

அத்தகைய நல்வாய்ப்பை எல்லோருக்கும் வழங்கும் வகையிலும், தாங்கள் ஆற்றிவரும் பணியின் அளவைத் தெரிவிக்கும் வகையிலும், இவ்வளவு சிறப்புடன் மாநாடுகளை நடாத்திய தஞ்சை மாவட்டக் கழகக்கண்மணிகளையும் வரவேற்புக் கழகத் தலைவர் கே. கே. நீலமேகம், எ. வி. பதி, எஸ். பெத்தண்ணன், முதலியோரையும் வாழ்த்துகிறோம், வளர்க, கழகம்! ஓங்குக முழக்கம்!!

★

# மிகப் பொருத்தம்

"மாஞ்செஸ்டர் கார்டியன்" புகழ்கிறதாம்' 'மவுண்ட்ரோடு' ஏடுகள் பூரிப்புடன் வெளியிடுகின்றன.

காமராஜர் அரசுக்கட்டிலில் அமர்கிறார், பழைய, புதிய, 'கனம்'களோடு. அன்று, அறிவிக்கின்றன, இச் செய்தியை.

மேதையாம்! விவேகியாம்!— இங்கிலாந்து ஏடு, மதிப்புரை வழங்குகிறது. வழங்கட்டும்! வாழ்த்தட்டும்!! ஆனால், அந்தச்செய்தியை வரப்பிரசாதமெனக் கருதி இங்குள்ள ஏடுகள் ஏன் கொட்டம் அடிக்கவேண்டும்.

வெள்ளையர் ஏடு, வழங்கும் மதிப்புரையைக் காட்டி, "பாரீர்! எங்கள் ஆச்சாரியாரை எங்கேயோ இருக்கும் பத்திரிகை பாராட்டுகிறது. இது கிடைக்குமோ, இப்போது வருபவருக்கு?" என்று கூறும்ல் கூறுகின்றனர்.

மன எரிச்சலின் விளைவு! மனச் சோர்வைத் தணிக்கத் தேடும் வழி!! ஆனால், கேலிக்குரியது.

சொந்த மனைவியின் கற்பை அண்டைவீட்டுக்காரன் அறிவிக்க, அதனை எடுத்துக்கொண்டுபோய் ஊராரிடம் கூறியா, உள்ளத்தில் சந்தோஷம் பெற முயற்சிப்பது? அதிலும், "மான்செஸ்டர் கார்டியன்" யார்? ஒருபோது, இன்று ஆச்சாரியாரைப் புகழும் இதே வாயால் வெலிங்டனையும் அமெரியையும் புகழ்ந்தவன்தானே!!

சுதந்திரக் கிளர்ச்சியின்போது சுட்டுத் தள்ளியவன், இன்று துந்துபி முழக்குகிறான். மேதை! விவேகி!—என்று பட்டம் வழங்குகிறான்.

ஒரு விதத்தில் அதுவும் பொருத்தம்தான், ஆச்சாரியார் விஷயத்தில். இந்நாட்டு ஏடுகள் புகழுமளவுக்கு என்ன செய்தார்? வறண்டவன் வாழ்க்கையில், வளமோ—சுருண்டு போனவனுக்குச் சுகமோ—வெண்டு கோள் விடுத்தவனுக்கு வாய்ச்சொல்லோ வழங்கவில்லையே. வெள்ளையன் நடைதானே போட்டார்! அவன் விட்டுச் சென்ற துப்பாக்கியையும் தோட்டாவையும் தானே எடுத்தார்!!—'மான்செஸ்டர் கார்டியன்'தான் பாராட்டவேண்டும் இவரை.

ஒன்பது மாதங்கள்! — ஓடிவிட்டன, தூத்துக்குடித் துயவர்கள் மீது, அதிகார அம்பைப் பாய்ச்சி சிறைக்குள்ளே போட்டு.

276 நாட்கள்!!—அப்பப்ப, அந்த சிந்தை கலங்கா சிங்கங்கள், நம்மையெல்லாம் பிரிந்து, நாட்டில் உலவ முடியாமல், கம்பிகளுக்குள் கிடக்கின்றனர்.

(12-ம் பக்கம் பார்க்க)

# மலர் மாலையல்ல! புகழ் மாலை!!

"துரோகி!"

"சுயநலக்காரன்"

"எதிரிகளோடு சேர்ந்துகொண்டு நம்மைக் காட்டிக்கொடுக்கிறான். அவர்கள் வீசும் தூண்டிலுக்குப் புழுவாக இருக்கிறான்"

"எச்சிலுக்காக இனத்தையே காட்டிக்கொடுக்கிறான். சதிகாரன்!"

"சண்டாளன்!"

"துண்டு துண்டாக வெட்டி யெறியவேண்டும். சதையைக் கிழித்து எறியவேண்டும்"

"அவனுடைய இரத்தம், நம்முடைய பூமியின்மீதுகூட சிந்தக்கூடாது. நாமே, குடித்துவிட வேண்டும்"

"அப்படிச் செய்தால்தான், அவனைப்போன்ற துரோகிகள் முளைக்க மாட்டார்கள்"

*

கொலைசெய்யப்பட்டான், அவன்! 1952 அக்டோபர் 7-ந்தேதி இரவு, அவனைச் சுட்டுக் கொன்றுவிட்டனர்! அவனுக்காகப் பரிந்துவந்த பலரும், கத்திகளால் வெட்டி வீசப்பட்டனர்!! செய்தி, அகில உலகுக்கும் பரவிற்று.

லண்டனிலே திகில்! அமெரிக்காவிலே கலக்கம்! பெல்ஜியத்திலே திகைப்பு! பிரான்சிலே விழிப்பு! சர்ச்சில், தனது துருப்புகளுக்குக் கட்டளையிட்டார், 'செல்க!' என்று. அன்றுமுதல், ஏடுகளிலே கண்டு வருகிறோம், பயங்கரமான செய்திகளை. படங்கள், பலவும் போட்டு வெளிவருகின்றன.

*

"வெள்ளாட்டை வெட்டுவார்கள்! அப்போது வழியும் ரத்தத்தில் சபதம் எடுத்துக் கொள்வார்கள்! குதிரைகளை வெட்டுவார்கள்! கொட்டும் குருதியைக் குடித்து ஆனந்த வெறியாடுவார்கள்! அட்டகாசம் சகிக்கமுடியாது! ஆட்களின் உருவமோ, மிருகம்போல! வெட்டுக் கத்திதான், அவர்கள் பேச்சு! கொலை, குத்துதான், அவர்கள் மூச்சு! கோரமானவர்கள்! பயங்கர இயக்கத்தார்! அவர்களுக்கு ஒரு தலைவனும்–பெயர், "எரியும் ஈட்டி" யாம்!! அந்த ஈட்டியின் ஆர்ப்பரிப்பு அடங்கமுடியவில்லை – இலண்டனில் படித்தவனும். அங்கே கற்றபாடத்தைக்கொண்டு, தனக்குக் கீழிருப்பவர்களை, விரோதிகள்மீது பழி வாங்கச்செய்கிறானும். அப்பப்ப! அராஜகக் கூட்டம்—அரக்கர் கூட்டம்—உலகையே வெறிமயமாக்கும் கூட்டம். மந்திரமாம் தந்திரமாம்! மாய வித்தையாம்! பேய்விளையாட்டாம்!! அநாகரிகக் கும்பல் — ஆனாலும், கொட்டமடிக்கிறது!!"

*

"துரோகிகளுக்குச் சாவு!"

"விரோதிகளுக்கு, வெட்டு! குத்து!!"

"நாம் ஆடுகளாயிருந்தோம். அவர்கள், நம்மை வெட்டும் கத்திகளாயிருந்தார்கள். காலம் மாறிவிட்டது. அவர்கள் இப்போது, ஆடுகள்! நாம் வெட்டும் கத்திகள்!!"

இவ்விதம் எக்காளம் எழுப்பிய வண்ணம் தென் ஆபிரிகாவிலுள்ள சிறியதோர் பிரதேசமான கென்யாவிலுள்ள ஆதிக்குடிகள், நடத்திவரும் போராட்டங்களைப்பற்றி உலகு அறியும். அவர்களது "மாவ்—மாவ்" இயக்கத்தைக் குறித்து, ஏடுகள் தந்துவரும் விளக்கங்கள் பலரகம்.

கென்யா — பிரிட்டனின் ஆதிக்கத்திலுள்ள, இடம். அங்கே, இந்தப் போர். இதனால்தான், லண்டன் ஏடுகள் பாய்கின்றன! சர்ச்சில் முரசு கொட்டுகிறார்!!

உலகத்திலுள்ள இன்றைய கண்டங்களிலேயே அந்நியர்கள் கொட்டமடிக்கும் இடமாக இருப்பது, ஆபிரிக்கக் கண்டமாகும். சுமார் 16 கோடி, ஆதிக்குடிகள், அந்தக் கண்டத்தின், 'நன்னம்பிக்கைமுனை' முதல் 'கெய்ரோ'வரையிலே பரவிக் கிடக்கிறார்கள். அந்த 16 கோடி மக்களும் 50 லட்சம் வெள்ளைக்காரர்கள் கையிலே சிக்கி, சித்ரவதைக்கு ஆளாகிக்கொண்டிருக்கின்றனர்.

பூமியில், கால்வாசிப் பரப்பைக் கொண்டிருக்கும் கண்டம், அது. அந்தப் பரப்புக்குச் சொந்தமான மக்கள் சுமார் 16 கோடி! ஆனால், அவர்களை ஆள்வது, வெள்ளையர்!!

'ஐரோப்பியரின் கசாப்புக்கடை' என்று சொல்லக்கூடிய அளவில், ஒரு பக்கம் பிரெஞ்சுக்காரரும், இன்னொரு பக்கம் பெல்ஜியத்தாரும், மற்றோர் பக்கம் அமெரிக்கருமாகப் பங்கு போட்டுக்கொண்டிருக்கும் அங்குள்ள பிரதேசங்களில் ஒன்று, கென்யா–ஆங்கிலேயரின் பிடியிலே, கிடப்பது.

கடைசிக் கோடியிலிருக்கும் தென் ஆபிரிக யூனியனில் பிரிட்டிஷாரின் பார்வைக்குக் கட்டுப்பட்ட சர்க்கார் இயங்குகிறது! அந்த சர்க்காரின் தலைவன்தான் டேனியல், மலான்!! ஆங்கிலேயரின் பிடியிலே சிக்கிக்கிடந்த மற்றோர் பூமி, எகிப்தும்கூடானும். இப்போது அது, விடுதலைக் கொடி பறக்க விட்டுவிட்டது! பிரிட்டிஷாரின் நேரிய பார்வையில், கிடக்கும் சிறு பிரதேசம், இப்போது, கென்யாதான். அங்கு, நடைபெறும் நிகழ்ச்சிகளைப்பற்றியே, அடிக்கடி நாம் கேள்விப்படுகிறோம்.

*

நிலவளம் கொழிக்கும், கென்யாவுக்குள், ஐம்பது ஆண்டுகளுக்கு முன்புதான், வெள்ளையர் நுழைந்தனர். கவனிப்பாரற்றுக்கிடந்த பூமிகளை, வசப்படுத்தி, அந்த நிலத்துக்குச் சொந்தமான மக்களை அடிமைகளாக்கி, அவர்கள் உழைப்பிலே உல்லாசம் அனுபவித்து வருகின்றனர்.

இந்தக் கொடுமையால், வந்து புகுந்தோரின் வாழ்வில் வசந்தமும், சொந்த நாட்டினரின் வாழ்க்கையில் புயலும் வீசிக்கொண்டிருக்கிறது. சுரண்டிக் கொழுப்பவன் சுகமும், எத்திப்பிழைப்பவன் பித்தலாட்டமும் எத்தனை நாளைக்கு நீடிக்க முடியும்? ஆண்டுகள் பலவாய் அடிமையாய்க் கிடந்தும், 'அருகில் வராதே' என்று ஏசப்படும் வறுமை வாழ்க்கையாய், பொறுமையே பூஷணமாய்க்கிடந்த அவர்கள் இன்று பொங்கியெழும்பி விட்டனர்! காரணம், அவர்கள் நிலத்தில் வாழவும் அதனை உழவும் அவர்களுக்கு உரிமை இல்லை இன்று.

நிலம் கேட்டால், அடி! உதை!!

எங்களுடையதுதானே! — என்றால், சிறை! தண்டனை!

இனிப்படி எங்கும்?—சட்டம் கொட்டுகிறது!

இத்தாங்கொணா அடிமைத்தனம் ஒரு பக்கம் என்றால், அவர்கள்மீது வீசப்படும் மற்றோர் ஈட்டி, 'காட்டு மிராண்டிகள்' எனப்படுவதாகும். கருப்பு நிறத்தவர்!—அதனால், நாகரீகமற்றவர்களாம்!!

அவர்கள் உழைத்துத் தரும் பொருள்களிலே, அந்த அநாகரீகம் தென்படுவதில்லை. ஆனால், அவர்களிடத்திலே காட்சி தருகிறதாம்!! கூறியபடி கொடுமை செய்கின்றனர்.

இந்தக் கொடுமையை எதிர்த்து ஆபிரிக்க கண்டம் முழுமையும், கிளர்ச்சித்தீ கொழுந்துவிட்டெரிகிறது. அதன் ஜுவாலை, கென்யாவில் கோரமாக வீசுகிறது! அதற்குத் தலைவராகயிருப்பவர் கென்யாட்டா! அவர் பெயர்தான் எரியும் ஈட்டி!

*

அன்னிய ஆதிபத்தியனருடன் போராடும் இந்த "மாவ் மாவ்" இயக்கத்தினரைப்பற்றி, பயங்கரமான செய்திகளை, ஏடுகள் வெளியிடுகின்றன.

படிக்கும்போது, மயிர்க்கூச்செறியும்.

அதனால், அவர்கள்மீது, எப்படி பழியையும் குற்றத்தையும் சுமத்த முடியும்?

விடுதலை முழக்கம் வேறிடங்களிலே கேட்கும்போது, அந்தக் குரலொலியைச் செவிமடுக்கும் அடிமை வாழ்வினர், சிங்க ஏறுகளாகக் கிளம்பாமலாயிருப்பர் — அதிலும், கென்யாட்டா — உலகுக்கே ஜனநாயக உபதேசம்செய்யும் இங்கிலாந்திலே படித்தவர், அறிந்தவர். அவருள்ளத்திலே, சுதந்திரக்கனல் கொழுந்துவிட்டெரிவதிலே ஆச்சரியமென்ன!

அந்நியன் தங்களைப்படுத்திய கொடுமைகள் தாங்காததால், அவர்கள் இன்று வெறிப்பாதை சென்று வேதனைகளைச் சொரிகின்றனர்.

ஆங்கிலேயப் பிரபுக்களைச் சுட்டுக்கொல்கின்றனர்!

"உன்னைச் சாகடிப்போம்!" என்று கடிதமூலம் எச்சரிக்கின்றனர்.

உல்லாசம்! கேளிக்கை! ஒய்யாரம்! ஆடம்பரம்!—ஆகியவைகளோடு வாழ்ந்த ஆங்கிலேயரிடையே இன்று, அச்சம்! பீதி! கவலை! நடுக்கம்!

நாடு, காடாகிறது. இந்த நிலைமையைக் கண்ட பிரிட்டிஷார், கென்யா மக்களின் வாழ்க்கையை அவர்கள்வசமே விட்டுவிட்டு வெளியேறிவிட விரும்பவில்லை—மாறாகப் படைகளை அனுப்புகின்றனர். மலேயாவில் செய்வதுபோல சிறு சிறு விமானங்கள் மூலம், பல இடங்களுக்கும் சென்று, மாவ்—மாவ் இயக்கத்தினர் மறைந்திருக்கும் காடுகளையெல்லாம் குண்டுக்காளாக்குகின்றனர்.

இந்தக் கொடுமையை மறைக்க, 'கோரமானவர்கள்' எனும் குற்றச்சாட்டை, கென்யாவினர்மீது வீசுகின்றனர்.

வாழ்க்கையில் வலையையும் வேதனையையும் சந்திக்கும் எந்த மனிதனும், தொடர்ந்து அதே நிலைமை நீடிக்குமேயானால், தன்னை ஆட்டிப்படைக்கும் ஆதிக்கத்தையொழிக்க, மிருகமாகிறான்! 'தன்னுயிர் போயினும் சரி,' என்ற துணிவுக்கு வருகிறான்!! இத்தகைய துணிவு ஏற்படுகிற காரணத்தாலேயே, விடுதலை ஏடுகளில், பலரது பிணங்கள் தூக்குமேடைகளில் உருண்டதையும், பல பக்கங்கள் இரத்தமயமானதையும் காண்கிறோம்.

இந்த நிலை ஏற்படும்போது, தன்னைச் சேர்ந்தவனே தனக்குத் துரோகியாக மாறுவதைக் காணும் விடுதலைவீரன் உள்ளம் கொதிக்கத்தான் செய்யும்.

அந்தக் கொதிப்பின் காரணமாகவே, "மாவ்—மாவ்" இயக்கத்தினர், தம்மிடமுள்ள துரோகிகளை, துண்டு துண்டாக வெட்டியெறிய வேண்டுமெனும், கோரமுடிவுக்குச் சென்றனர். அதன் காரணமாகவே, அவர்களது வெறிப்போர், துவங்கிற்று! துங்கு என்பான், கொலை செய்யப்பட்டான்!!

வெள்ளையனின் கையாளாக இருந்த வாருஹியுதுங்கு என்ற அவன் கென்யாவாசிகளிலுள்ள பல முக்கியஸ்தர்களில் ஒருவனாயிருந்தான். முக்கியஸ்தனே, முடிக்க மாறியாக இருந்தால், அவனை நம்பிய மக்களிடம் ஆத்திரமும் ஆவேசமும் எழும்பாமலா இருக்கும்?

அவனை வாழ்த்தினர், முன்பு!

இப்போது, துரோகி! சகிக்கமுடியுமா?

**நினைவுக் கல் நாட்டல்**

4–4–1954-ல் காலமான என் அண்ணார் திரு என். சங்கரன் அவர்களுக்கு, நினைவுக் கல் நாட்டல் 19–4–1954 திங்கட்கிழமை காலை 8 மணிக்கு தி. கோ. காவேரி ரோடு, தேவதானம் ரயில்வேகேட்டுக்கு அருகிலுள்ள இடத்தில் நடைபெறும். பெரியார் ஈ.வெ.ரா. டாக்டர் இ. மதுரம், ஏ. ராமசாமித் தேவர், சி. என். அண்ணாதுரை, ஈ. வெ. கி சம்பத், எம். கே. தியாகராஜபாகவதர் ஆகியோர் கலந்து கொள்வர். அன்பர்கள் வருக.

என். சாம்பசிவம் (சாம்பு)

வினேவு, அவன் கொலையுண்டான்!

கொலையுண்ட அவனது பிரேதத்தை சகலவித மரியாதைகளுடனும் அடக்கம் செய்தனராம், வெள்ளையர்கள். செய்யத்தான், செய்வர்! அன்று காட்டப்படும் 'அன்பு' எனும் வலையால், இன்னும் பல, 'துரோகி'களைச் சிருஷ்டிக்கலாமல்லவா? அதனாலேயே, அவனுடைய பிணத்தைச் சகலவிதமான ஆடம்பரங்களோடும், கென்யா அரசினர் அடக்கம் செய்தனராம்!!

இனத்தைக் காட்டிக் கொடுக்கும் துரோகிகளுக்கு, எதிரிகளிடமிருந்து என்றுமே, மாலையும் வாழ்த்துரையும் கிடைக்காமற் போகாது!

சிறுமீனைக் கொண்டு பெருமீனை விழ்த்தும், இந்த 'விபீஷண விளையாட்டு,' அன்றுமுதல் இன்றுவரை ஆங்காங்கும் நடக்கிறது.

விபீடணர்கள் முடிசூட்டப்படுவதும் உண்டு! பதவிபீடங்களில் அமர்த்தப்படுவதும் சகஜம்!!

குங்கு, செத்தபிறகு அவனுக்கு ஆடம்பரமான வைபவங்களை நடத்தினர், வெள்ளையர்! நடத்தாமலா இருப்பர்? உயிரோடிருக்கும்போது அவன், எத்தனைபேரை அவர்களுக்கு, காணிக்கையாக்கியிருப்பான்!

அவன் பிணத்தை, வெள்ளையர், புதைத்தனராம்! ஆனால், யாருடைய கண்ணீர் அவனுடைய உடலைக் கழுவியிருக்கவேண்டுமோ, அந்தக் கண்ணீர்— அவனுடைய உறவினரின் சோகம்— அவன் பிணத்துக்குக் கிடைக்கவில்லை!! அவர்கள், அந்த நேரத்தில், அவன் பிணத்துக் கருகில்வரும்படி அனுமதிக்கப்பட்டிருந்தால்—கண்ணீரையல்ல, வாய் நீரைத்தான் கொட்டியிருப்பார்கள்!!

எச்சிலை அமுதம் என எண்ணுவோருக்கெல்லாம், எதிர்காலம் இதனையேபரிசாகவழங்கியிருக்கிறது—வரலாற்றில் இதனை எண்ணிப்பாராமல், விரோதிகள் வீசும் வெண்சாமரத்தைச் சாசுவதமென நம்பி, ஆதிக்கபுரியினருக்குக் கைகட்டிவாழும்குணம், ஆங்காங்கும் அரும்புதலைக்காண்கிறோம்! ஆச்சாரியார் ஆட்சியில், இதனைக்கண்டோம். இந்த 'விபீடணவேலை'யில், சண்டக்காயாளிவிருக்கும் பிரெஞ்சு ஆதிக்கமும், ஈடுபடவிரும்புகிறதாம் — காரைக்செய்தியொன்றுகூறுகிறது. விடுதலைப் போரை எதிர்த்து புது அரசியல் கட்சியொன்று நிறுவப் பட்டிருப்பதாக.

பூரிப்பு! மலர்மாலை!!—இவை இப்போது, கிடைக்கலாம்.

இவைகள், உலர்ந்துவிடக்கூடும், நாளை. ஆனால், மலர்ந்தமணம் வீசக்கூடிய மாலையொன்றுளது. அது, ஆதிக்கக்காரர்கள் தருவதல்ல! மக்கள் தருவது!! அது, புகழ்மாலை!!

அந்த மாலையைப் பெறப்பாடுபடுவதே, நல்லோர் பண்பு. இதனைக் கவனத்திலிறுத்துகிறோம், சம்பந்தப்பட்டவர்களுக்கு.

★

9-ம் பக்கத் தொடர்ச்சி

ஐந்து மாதம்!—அவர்களைக் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தி வேடிக்கை பார்த்தது, ஆச்சாரியார் அரசு.

இப்போது செஷன்சுக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்கள், செயல் வீரர்கள் சிவசாமி, தங்கப்பழம், சாமிநடராஜன், ரத்னம் முதலியோரும், ஐம்பது வீரர்களும்.

அதேபோல, திருச்சிச் சிறையிலே $1\frac{1}{2}$ ஆண்டு கடுங்காவல் தண்டனை பெற்று கடந்த 36 நாட்களாக களியும் கையுமாய், கிடக்கின்றனர் கண்ணதாசனும் தோழர்களும். தர்முக்கும் இன்னுஞ் சிலருக்கும் நோயாம்.

இந்தப் பரிசுகளை, முன்பெல்லாம், 'அமெரி' வழங்கினான்! இப்போது, ஆச்சாரியார் வழங்கினார்!! லண்டன் ஏடு, பாராட்டுகிறது, பொருத்தம்தானே.

விடுதலைக் குரல் எழுப்பியவர்களை வெள்ளையர் வர்க்கம் படுத்திய பாட்டின் அளவுக்கு நம்மை நாடாண்ட ஆச்சாரியார் நலியச் செய்திருக்கிறார்.

நேர்மையை மதிக்கவில்லை! நீதியை அலட்சியம் செய்தான்!—இதுதான், பிரிட்டிஷ் துரைமகன்களின் ஆட்சியில், கூறப்பட்ட குற்றச்சாட்டு.

அதே, குற்றச்சாட்டைத்தான், ஆச்சாரியார் ஆட்சிக்கும் மக்கள் மன்றம் வழங்குகிறது—இதுபோது. எனினும், புகழ்கிறதாம், மான்செஸ்டர் கார்டியன்! அதனைக்கூறிப் பூரிக்கின்றனர், இவர்கள்!!

※

## தூத்துக்குடி வழக்கு

செஷன்ஸ் விசாரணைக்கு அனுப்பப்பட்டிருக்கும். தோழர்களை ஜாமீனில் விடுவிக்கும் முயற்சியை உடனடியாகத் தொடங்கும்படி, நெல்லையில் வக்கீல்களுக்கு அவசரத் தந்தி தரப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமான அலுவலைக் கவனிப்பதற்காகவே, வழக்கறிஞர் இளம்வழுதி நெல்லை செல்கிறார்.

சென்னையில், இந்த வழக்கு சம்பந்தமாகக் கவனித்துவரும் வழக்கறிஞர் நாராயணசாமி அவர்களும் தோழர்களை ஜாமீனில் வெளியே கொண்டுவரும் வழிவகைபற்றி வேலைசெய்து வருகிறார்.

மாஜிஸ்திரேட் கோர்ட்டிலே விசாரணை நடைபெற்றுக் கொண்டிருந்தபோது, பல முறை, ஜாமீன் மனு போடப்பட்டு நிராகரிக்கப்பட்டது, நேயர்கள் அறிந்ததே.

ஹைகோர்ட்டிலும் ஜாமீன் மனு நிராகரிக்கப்பட்டது—ஆனால் கீழ்க்கோர்ட் நடவடிக்கை முடிந்ததும் மீண்டும் ஜாமீன் மனு போடலாம் என்று கூறப்பட்டது.

இந்த 'ஜாமீன் மனு' ஹைகோர்ட்டுக்கு வந்தாகவேண்டிய நிலை ஏற்பட்டால், வழக்கு நடத்தத் தாம் வருவதாக, பாரிஸ்டர் வி. எல். எதிராஜ் அவர்கள் வாக்களித்துள்ளார் என்பதையும் நேயர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறோம்.



# முடியுமா இவரால்?

மூடநம்பிக்கைகளை முறியடிக்க வேண்டும், முன்னேற்றத்தின் பாதையை நோக்கிச் செல்ல அதுதான் சிறந்தவழி — என்று நாம் முப்பதாண்டுகளாக முழு நேரப் பிரச்சாரம் செய்து வருகிறோம். இந்தப் பிரச்சாரத்தைத் தவறுகப் பொருள்படுத்தி, நாம் தப்பான வழியில் செல்கிறோம் என்றும், மற்றவர்களையும் தவறான பாதைக்கு அழைத்துச் செல்கிறோம் என்றும், மதத்தை மங்க வைக்கும் மாபாதகச் செயலில் ஈடுபட்டுள்ளோம் என்றும், கடவுளை நிந்திக்கும் மடமைச் செயலைச் செய்கிறோமென்றும், நாம், ஒரு சாராரைப் பகைத்து, அவர்களை எதிரிகளாக்கிக் கொள்வதற்கே இந்தப் பிரச்சாரத்தைத் துவக்கியுள்ளோமென்றும் இன்னும் பல குற்றச்சாட்டுகளும், நம்மீது சுமத்தப்பட்டன — இன்றும் தொடர்கதையாகவே உள்ளது.

இவற்றிற்குக் காரணம், மூடநம்பிக்கைகளை, கடவுள் பெயராலும், மதத்தின் பெயராலும் நமக்குப் போதித்தவர்கள், மக்களிடம் அறிவாமையும் ஆராயாமையும் அவசியம் அமைதல் வேண்டும் என்பதில் கண்ணுங் கருத்துமாக இருந்து வந்தனர். மதத்தைப்பற்றியும் கடவுளைப்பற்றியும் மக்கள் கருத்து வேறுபாடு கொள்வதோ, அவைபற்றி ஆராய்வதோ கூடாது — அது 'பாபம்' என்று ஆண்டவன்போல் ஆணையிட்டு, ஆகமங்களையும் பிரமதநூல்களையும் எழுதி வைத்து, மக்கள் மனதில் தவிர்க்க முடியாத ஒரு அச்ச உணர்ச்சியை ஏற்படுத்தி விட்டனர். அதோடு, 'கடவுளின் பிரதிநிதிகள் இவர்கள்தான்—இவர்கள் சொற்படி நடப்பது, கடவுளின் சொற்படி நடப்பதுபோலாகும்,' என்றும் கூறி, அதற்கென ஒரு கூட்டத்தாரைத் தனியாக ஒதுக்கி — உயர்ந்த நிலையில்வைத்துவிட்டனர். ஆகவேதான், மக்களுக்கு வேண்டாத—மக்களை மாசுபடிந்த வாழ்க்கையில் தள்ளி வைத்திருக்கும் மூடநம்பிக்கைகளை, நாம் முறியடிக்க வேண்டும் என்று கூறுகிறபொழுது இந்த உயர்ந்த நிலையிலுள்ளவர்கள் உளம் வெதும்பி — தமக்கிருக்கும் தலைமைப் பதவி தகர்க்கப்பட்டுவிட்டால், எப்படி இனியும் வாழ்வது என்ற ஏக்கத்தால் நம்மை எந்தெந்த வகையில் யார் யாரைக்கொண்டு, தாக்கவேண்டும் என்ற போர்முனையில் தங்கள் முழு மூச்சையும் செலவழிக்கத் துணிந்து நிற்கிறார்கள்.

கடவுளைக் காய்பவர்கள் — மதத்தைக் கண்டிப்பவர்கள் — நாத்திகர்கள் என்று நம்மைக் கருதுபவர்கள், நம்முடைய உண்மையான—மறுக்க முடியாத நோக்கம் எது என்பதையே அறியமுடியாத அறிவுச் சூன்யர்கள் என்று நாம் அவர்கள்பால் பொறுமையோ பகையோ கொள்ளாமல், நம்முடைய பணியை நானிலம் ஏற்றுக்கொள்ளும்வரை தளராது செய்து வருவதென முடிவோடு செய்து வருகிறோம். நம்முடைய பணி பழுதற்றது—பகைமை உணர்ச்சியோடு செய்யப்படுவதல்ல—கடவுளிடம் நம்பிக்கை இல்லாததால் உண்டானதல்ல — விதண்டாவாதமல்ல — வீண்வம்புமல்ல—என்பன போன்றவைகளை இப்போது உணரவும், அந்த உணர்ச்சி மேலீட்டால், தங்களுடைய கருத்துக்களை வெளிப்படையாகவே கூறுபவரின் தொகை பெருகி வருவதைக் காண நம்முடைய பணி வீண்போகவில்லை என்று பெருமகிழ்வு கொள்கிறோம்.

இந்தப் பணியை செம்மையுறச் செய்ய திடஉள்ளம் தேவை —மற்றோர் பகைத்துக்கொள்வரே என்ற கோழையுள்ளங் கொண்டோரால் எள்ளளவும் முன்னேற்றங் காண இயலாது—மூடநம்பிக்கையை முறியடிக்க முடியாது

மூடநம்பிக்கையால், தங்கள் வாழ்வினையே பலியாக்கிக்கொள்ளும் பாமர மக்களைக் கண்டு நாம் பரிதாபப்படுகிறோம். படித்தவர்களும், படித்துப் பட்டம் பெற்றவர்களும் பழமையின்மீது கொண்டுள்ள பாசத்தைப் போக்கிக்கொள்ள துணியவில்லையே—வருக்கும் காட்டுக்கும் உதவாதது என்ற உண்மையைத் தெரிந்த பிறகும் ஊமைபராய் செவிடராய் உழன்றலைகின்றனரே என்பதைக் கண்டு நாம் கண்ணீர் விடுகிறோம்— கற்றவை விழலுக் கிறைத்த நீராயிற்றே என்பதால். படித்தும், உயர்ந்த பதவி பெற்றும் உலக நாடுகளின் நிலையை நேரில் கண்டும் உலகு வருபவர்களும் இந்த உதவாக்கரை நம்பிக்கைகளைப் போக்க-தடுக்க-தடுமாறுகின்றனரே-நம்பிக்கின்றனரே என்பதைபார்க்கிற பொழுது, நம் பணி எவ்வளவு மகத்தானது என்பதை உணர்கிறோம். அதனாலேயே, நம்மீது நிந்தை மொழி வீசுபவர்களை, நிலவினைக் கண்டு குலைக்கும் குக்கலென மதித்து, நம் பாதையில் நாம் பெருமிதத்தோடு நடை போட்டுச் செல்கிறோம்—கொடுமைகள் பலவற்றிற்கு ஆளாயினும் கெம்பீரத்தோடு செல்கிறோம்.

ஒரு சிலர், 'ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால்' என்ற பழமொழிக்கிணங்க, முன்னேற்றமும் வேண்டும், மூடநம்பிக்கையும்வேண்டும் என்று சொல்லியும் செயலில் காட்டியும் திரிந்து வருகிறார்கள். இந்தப் பட்டியலில், இந்த நாட்டின் முடிசூடா மன்னரெனப் போற்றப்படும் பண்டிதர் நேருவும் இருப்பதை இந்தியத் துணைக் கண்டத்திலுள்ளோர் அனைவரும் அறிவர். இவர் சில சமயங்களில் மூடநம்பிக்கையை முறியடிக்க வேண்டும் என முழக்கமிடுவார். பல சமயங்களில் பழமையின் பக்கம் நின்று ப்ரவசப்படுவார்—மூடநம்பிக்கைக்கு முழுத்துணை புரிவார்.

இவர், அண்மையில் ஆமதாபாத் ஜவுளித் தொழில் ஆராய்ச்சி நிலையக் கட்டிடத் திறப்பு விழாவில்,

"பழம் பெருமையைப்பற்றிப் பன்னிப் பேசி, நம் பிற்பட்ட நிலையைக் களைய முடியாது. மக்களை அழுத்தி வைத்திருக்கும் மூடநம்பிக்கைகளை வேருடன் களைய வேண்டும்."

என்று பேசியிருக்கிறார். இந்த உண்மையை அன்று அவர் கூறவேண்

டிய அளவுக்கு நிர்பந்தத்துக்குள்ளானர். இல்லையென்றால், கும்பமேளா நடைபெற உதவிகள் புரிந்தும், அந்தக் காட்சிகளைக் கண்டும் களிப்புப் பெற்றவரா இந்த வார்த்தைகளை வீசியிருப்பார்? சென்ற ஆண்டு, டில்லியில், 'ஹோலி பண்டிகையில்' கலந்துகொண்டு, இராவணனை ஒத்த உருவத்தினைக் கொளுத்துவது போன்ற கொடுமைச் செய்கைகளைக் கண்டு களித்தவர், மூடநம்பிக்கையை களைந்தே தீரவேண்டும் என்று முழக்கம் செய்திருப்பார்? அந்த வார்த்தைகளை அள்ளி வீசவேண்டிய அளவுக்கு, அலகாபாத்தாரை ஆழ்த்தியது, அங்கு நடைபெற்ற ஆரிபச் சடங்கு.

சங்கக் கட்டிடத்தின் பிரவேசத்தின்போது அடுத்தடுத்து நிகழ்ந்த வைதீகச் சடங்குகள் அவர் பொறுமையை இழக்கச்செய்தனவாம். 'பாரதத்தின் தவப்புதல்வன்'-புரோகிதனின் கையால் தம் நெற்றியில் திலகமிட்டுக் கொண்டாராம். திலகமிட அனுமதித்த நேரு புரோகிதன் தோள்தொட்டு, கட்டிடச் சுவரை தொடுவதற்கான சடங்கைத் தொடங்குகையில், 'இனிமேல் இதைச் சகிக்க முடியாது' என்று ஆத்திரம் கலந்த குரலில் கூறிவிட்டு, சடங்கு முடியா முன்னமே, கட்டிடத்தினுள் நுழைந்து விட்டாராம். இந்த ஆத்திரத்தின் எதிரொலிதான், மூடநம்பிக்கையை முறியடிக்க வேண்டுமென அவரை முழக்கம் செய்யச் செய்திருக்கிறது. இல்லை என்றால், அவருக்கேன் அதைப் பற்றிய சிந்தனை எழப்போகிறது?

புரோகிதரை, சடங்குகளைக் குறைத்துக் கொள்ளச் சொன்னாரே தவிர, சடங்கே தேவையில்லை என்று கூறவில்லை—ஏன்? அங்குதான் அவரின், ஆற்றில் ஒருகால், சேற்றில் ஒரு கால்' என்ற நிலைமை நன்கு விளங்குகிறது. எங்கே, தன்னை மத விரோதி என்று தூற்றிவிடுவார்களோ என்ற அச்சமே அலகாபாத்தாருக்கு ஏற்பட்டிருக்கவேண்டும். இல்லையெனில், மூடநம்பிக்கைகளைக் களைந்தே தீரவேண்டும் என்று கர்ஜனைபுரிந்தவர், மூடநம்பிக்கையின் செயல், தன்முன்னுலேயே, தன்னிடமே நடைபெறுவதை—ஏன் நேருவால் தடுத்து நிறுத்த முடியவில்லை? குறைத்துக் கொள்ளச் சொன்னவர்—கூடாதது என்று ஏன் செப்பவில்லை? அங்குதான், முன்னேற்றக் கொள்கையின்பால் அவர் கொண்டுள்ள தன்மை நன்கு விளங்குகிறது—பழைமைக்கு பரிவு காட்டும் போக்குத் தெற்றெனவிளங்குகிறது. முற்போக்காளருக்கு முற்போக்காளராகவும் பிற்போக்காளருக்குப் பிற்போக்காளராகவும் காட்டிக் கொண்டு, இருவரிடமும் நன்மதிப்பைப் பெற்று வாழ எண்ணுகிறார். இப்படி இரு முகங்கொண்டுலவினால், எல்லோரும் தம்மைப் பற்றிப் புகழ்வார்கள் என்று எண்ணுகிறார் போலும். அதனால்தான் மூடநம்பிக்கைகளை வேருடன் பிடுங்க வேண்டுமென கேட்டுக்கொண்டவர், எங்கேதமக்கு நாத்திகன் என்ற பட்டத்தைச் சூட்டிடுவாரோ என்றபதட்டங்கொண்ட பண்டிதர்,

"பழமையில் போற்றிப் பாதுகாக்கலாயக்கானவற்றை நீடிக்கச் செய்ய வேண்டும். ஆனால் அவற்றுடன் சம்மந்தப்பட்ட மூடநம்பிக்கை முதலியவற்றைக் களைந்தே தீரவேண்டும்"

என்றும் பகர்ந்திருக்கிறார்.

முன்னே ஒரு அடிவைத்து, பின்னால் நான்கு அடிவைக்கும் குதிரையின் நிலைமையில், முன்னேற்றப் பாதைக்கு விரைந்து செல்ல நினைக்கிறார், பண்டிதர்.

பண்டிதரைப் போன்றவர்களால் பழமையை எந்தக் காலத்திலும்

# புத்தர் பிறந்தார்

[ந. வே சீனிவாசன்]

வல்லிருள் மூடிய வையகம் வஞ்சகர்
மாயையிற் சிக்கித் தவிக்கையிலே
புல்லியர் தூவிய பொய்ம்மைகள் மாளவே
புத்தன் பிறந்தனன் பாரினிலே!

வேதம் இதிகாசம் சூதுப் புராணங்கள்
வெட்டிக் கதைகள் வளர்கையிலே
போதை வெறியரைப் புன்னகையால் வெல்லப்
புத்தன் பிறந்தனன் பாரினிலே!

தத்துவம் என்ற தடித்தனப் பேச்சில்லை
சத்தென்ற சித்தென்ற வித்தையில்லை!
புத்தம் புதிய பகுத்தறிவைச் சொல்லப்
புத்தன் பிறந்தனன் பாரினிலே!

பிறப்பினில் பேதங்கள் பேசிப் பிறரைவீண்
பேதைய ராக்கிழித் தள்ளவில்லை!
பொறுப்புணர் ஒற்றுமைப் பொன்னுரை தந்திடப்
புத்தன் பிறந்தனன் பாரினிலே!

மங்கிய அன்பு மலர்ந்திட நல்லற
வாழ்வு மணந்திடத் தன் முயற்சி
பொங்கிட எங்கும் அறிவும் விடுபடப்
புத்தன் பிறந்தனன் பாரினிலே!

அண்டர் உலகமும் ஆண்டவர் கூட்டமும்
ஆத்தமக் கொள்கையும் ஆட்டமுறப்
புண்தந்த பூச்சற மெய்தந்த எங்களின்
புத்தன் பிறந்தனன் பாரினிலே!



போக்கடிக்கமுடியாது—பழமையில் இலாயக்கானது இது என்றும் பகுத்துப் பார்த்துச் சொல்லமுடியாது — மூட நம்பிக்கையை முறியடிக்க முடியாது.

மூட நம்பிக்கையை வேரோடு களையவேண்டும் என்றால், திடமான உள்ளமும், எதிர்ப்பைத் தாங்கும் சக்தியும், தன்னம்பிக்கையும், தன்னடக்கமும், தளரா உழைப்பும் தேவை.

பழமையைப் போக்க பாடுபட்டவர்கள் எவ்வளவு கஷ்டநஷ்டங்களுக்குள்ளானார்கள், மூடப் பழக்க வழக்கங்கள் மக்கள் மனத்திலிருந்து மாய்த்தொழிக்கப் பாடுபட்டார்கள் என்பதை எண்ணும் பொழுது, பண்டிதரின் பசப்பான பேச்சால், பழமை மாய்ந்தொழியும் என்று எண்ணுவது ஏமாளித்தனமாகும்.

பழமையில் இலாயக்கற்றவை இவை என்று எடுத்துக் கூறி, அவைகளை அசுற்ற அல்லும் பகலும் அயராது பணியாற்றும் நம்மைப் பார்த்து, 'மத விரோதிகள்' என்று மாச்சரிய சொல் வீசுவோர், பண்டிதரின்பேச்சுக்கு என்ன பதில் தரப்போகிறார்கள்? புரோகிதச் சடங்கை சகிக்க முடியாது என்று சாற்றியவரை எதிர்த்து என்ன சொல்லப் போகிறார்கள்?

இப்படிப்பட்ட இழிவான சடங்கையும் சம்பிரதாயத்தையும் தான் நாம் வெறுக்கிறோம் — சகிக்கக் கூடாது என்கிறோம். என்றாலும், 'பார்ப்பன விரோதிகள்' என்ற பழிச் சொல்லை நம்மீது வீசுகிறார்கள். இப்பொழுது பண்டிதர் பகருகிறார், பண்டாரசன்னதிகளும் பரமனின் அருள் பெற்றோரும் என்ன கூறுவர்?

சங்க கட்டிட சடங்குக்கே சகிக்க முடியாது என்று ஆத்திரம் கலந்த குரலில் குறிப்பிட்டார் என்றால், பிறந்தால் சடங்கு, பள்ளிக்கு அனுப்பச் சடங்கு, பருவமடைந்தால் சடங்கு மணம் முடிக்கச் சடங்கு, இறந்தால் சடங்கு, இறந்தவருக்கு ஒவ்வோர் ஆண்டும் சடங்கு என்ற இக்குள்ள இழிநிலைகளை அலகாபாத்தார் அறிந்தால் எவ்வளவு ஆத்திரப்படுவார்—எத்துணை வேதனை அடைவார். வேருடன் என்ன — மீளவும் நிலத்திலேயே நாசமாக்கவேண்டும் என்று நவில மாட்டாரா!

மயானத்துப்பேச்சு மயானத்துடன் போச்சு என்பது போல, பண்டிதரின்பேச்சு, பேச்சலங்காரத்தோடுபோகும் நிலைமையை நாம் கண்டிருக்கிறோம். வைதீகத்தை வெறுத்துப் பேசிய பண்டிதர், சில ஆண்டுகளுக்கு முன்னால் பூணூலைப் பிடித்துக் கொண்டு, தர்ப்பணம் செய்த காட்சியினை பத்திரிகைகள் படம் போட்டுக் காண்பித்ததை நினைவில் கொண்டு வரும் பொழுது பழமையைப் போக்கப்பாடுபடுவார் என்று எப்படி நாம் நம்பமுடியும்?

பண்டிதரால், எங்காவது— எப்பொழுதாவது, பழைமையைப் போக்க வேண்டும் என்று பேசி விட்டுச் செல்ல முடியுமே தவிர, பழைமையிலிருந்து—மூடப்பழக்கத்தினின்று அவையை விடுவித்துக் கொள்ளமுடியாத அளவில்தான் அவர் இருந்து கொண்டிருக்கிறார்—இருந்து கொண்டிருக்கமுடியும்.

இந்தநிலையினைத்தான், தஞ்சையில் நடைபெற்ற சமூக சீர்திருத்த மாநாட்டில் நம் பொதுச்செயலாளர் அவர்கள்-"நேரு நடந்துகொண்டே வியாபாரம்செய்பவர். நாம்கடைக்கு பெயர் கொடுத்து உட்கார்ந்து கொண்டு வியாபாரம் செய்பவர்கள். தெருவிலே வரும் வியாபாரியிடம் அதிகம் நாணயம் காணமுடியாது. ஆனால், நம்மிடம் வாங்கிய பொருள் நல்லதல்ல என்று வாங்கியவன் அறிந்தால், நம்மிடம் வந்து அவன் கேட்கிற வசதியை வாய்ப்பை நாம் தந்துள்ளோம்" என்று குறிப்பிட்டுள்ளார்.

உண்மையில், நேருவுக்கு மூடநம்பிக்கை ஒழிக்கவேண்டுமென்பதில் எண்ணமிருந்தால், அந்தப் பணியை, அதற்கென உள்ளவர்களிடம் ஒப்படைத்து, அதற்கானவசதியும் வாய்ப்பையும் தந்துதைத்தால், அந்தப் பணி மிகவிரைவில்— மிகச்சுலபமாக தீர்ந்துவிடும். செய்வாரா, பண்டிதர்? செய்யமுடியுமா அவரால்?

பண்டிதரால் முடியாது பண்டிதரின் துணையிருந்தால் போதும். அந்தப் பணியை நிறைவேற்ற நாம் இருக்கிறோம். நாம் கொடுமையை வரவேற்றேனும் மடமையை மாய்த்தொழிக்கும் பரம்பரை. இடையறாது உழைப்பும், தன்னம்பிக்கையும் கொண்டு, மக்களின் வாழ்விலே மறுமலர்ச்சியையும் அவர்கள் எண்ணங்களிலே புதுமை இடம் பெறவுமான நிலைகளையும் உருவாக்குவோம்—பழமையைமாய்ப்போம்—இந்தச்சமுதாயத்தின் அமைப்பு முறையை மாற்றி அமைப்போம்—என்ற நம்பிக்கையோடு பணியைத் தொடர்ந்து செய்வோம்— வெற்றி பெறுவோம். ❁

Edited, Printed & Published by C. N. Annadurai M.A., at "Dravidanadu" Press, 95, Tirukkachinambi St., Kancheepuram.

